# இல்லம் தோறும் இறைவழிபாடு

- அற்புதமான திக்ருகள்
- அருமையான ஸலவாத்துகள்
- அழகிய துஆக்கள்
- அன்றாட சுன்னத்துகள்
- அவசியமான சட்டங்கள்
- அருள்மறை சூராக்களின் சிறப்புகள்




தொகுப்பு

பெரிச்சிபாளையம்
மௌலவி, முஃப்தி **M.முஹம்மது ஹுஸைன்** தாவூதி பாஜில் தேவ்பந்தி
பேராசிரியர், தாவூதிய்யா அரபிக்கல்லூரி, ஈரோடு.
செல் : 91507 51812

கீரனூர் மௌலவி, அல் ஹாபிழ் **H.நூருல் ஹஸன்** சிராஜி
பேராசிரியர், நிஸ்வான் மதரஸா, அலங்கியம்
செல் : 98941 98128

# நூல் விபரம்

| | | |
|---|---|---|
| நூலின் பெயர் | : | **இல்லம்தோறும் இறைவழிபாடு** |
| முதல் பதிப்பு | : | முஹர்ரம் 1440, செப்டம்பர் 2018 |
| பிரதிகள் | : | 500 |
| பக்கங்கள் | : | 112 |
| தொகுப்பு | : | முஃப்தி **M. முஹம்மது ஹுஸைன்** தாவூதி |
| | | மௌலவி,ஹாபிழ் **H. நூருல் ஹஸன்** சிராஜி |
| தட்டச்சு & வடிவமைப்பு | : | ***ஸ்டார் கிராஃபிக்ஸ்,*** விழுப்புரம் 91503 05702, 8825888318 |



| | | |
|---|---|---|
| விலை | : | **ரூ. 60/-** |


| | | |
|---|---|---|
| கிடைக்குமிடம் | : | மௌலவி<br>***முஹம்மது ஹுஸைன் தாவூதி***<br>பேராசிரியர், தாவூதிய்யா அரபிக் கல்லூரி<br>பெரிய அக்ரஹாரம், ஈரோடு - 638005<br>Cell: 9150751812<br>perivaihussain1981@gmail.com |


| | | |
|---|---|---|
| வெளியீடு | : | ***S.K.S. பப்ளிஷர்ஸ்,***<br>27/50 மஃரூப் சந்து, L.I.C. பின்புறம்,<br>தாயார் சாஹிபு தெரு,<br>மௌண்ட் ரோடு, சென்னை - 2<br>95519 44709, 044 28612709 |


---

குறிப்பு : இந்நூல் திருமணங்களிலும் இன்னபிற நிகழ்வுகளிலும் அன்பளிப்பு செய்வதற்கு மிகவும் ஏற்ற நூல். விருப்பமுள்ளவர்கள் எமது முகவரியை அணுகவும்.

# உள்ளே...

## ● அற்புதமான திக்ருகள்


1. நான்கு பெரும் பலன்கள் .................................................. 9
2. இருபது இலட்சம் நன்மைகள் ........................................ 9
3. எழுபதாயிரம் மலக்குகளின் துஆ ................................ 10
4. கடினமான வேலைகள் இலேசாக.................................. 11
5. கணக்கற்ற வெகுமதிகள் .................................................... 12
6. சொர்க்கத்தில் நுழைய ........................................................ 12
7. தீங்குகளை விட்டும் பாதுகாப்புப்பெற .......................... 13
8. ஆயிரம் ஆயத்துகளுக்குச் சமமான நன்மை........... 13
9. ஒரு நிமிடத்தில் ஒரு குர்ஆனின் நன்மை ............... 15
10. கேட்டவையனைத்தும் கிடைக்கப்பெற ........................ 15
11. அற்புத பலன் தரும் ஆயத்துல்குர்ஸி ........................ 16
12. பத்து இலட்சம் நன்மைகள் .............................................. 18
13. 1,24,000 நன்மைகளைப் பெற ........................................ 18


## ● அருமையான ஸலவாத்துகள்


1. மலக்குகளை களைப்படைய வைக்கும் ஸலவாத் ... 19
2. பாசநபியின் பரிந்துரையைப் பெற்றுத்தரும் ஸலவாத் 19
3. பெரிய தட்டில் அமல்களை நிறுக்க உதவும் ஸலவாத் 20
4. இமாம் ஷாஃபிஈ (ரஹ்) ஓதிய இனிய ஸலவாத்........ 20
5. துன்பங்களைத் தீர்க்கும் துன்ஜீனா ஸலவாத்.............. 21
6. ஸதகாவின் நன்மையைப் பெற்றுத்தரும் ஸலவாத்.... 22
7. காருண்ய நபியை கனவில் காட்டும் ஸலவாத்.......... 23
8. ஆறு இலட்சம் நன்மைகளை அள்ளித்தரும் ஸலவாத் 24
9. வறுமையை நீக்கி வளம் தரும் ஸலவாத் ................... 24

10. படைப்புகளுக்கு சமமான நன்மைதரும் ஸலவாத் 25
11. நாட்டங்களை நிறைவேற்றிடும் நாரியா ஸலவாத் 26
12. சிறப்புகளை ஈந்திடும் சிறந்த ஸலவாத் .......................... 27
13. நாள் முழுவதும் நன்மை தரும் ஸலவாத் .................... 28
14. உடல் நோயை நீக்கும் உன்னத ஸலவாத் ................. 29
15. எண்பதாண்டு வணங்கிய நன்மைதரும் ஸலவாத் 29

## ● அழகிய துஆக்கள்

1. துஆக்கள் ஏற்கப்பட ஓதும் துஆ ................................ 31
2. பிரச்சனைகள் தீர ஓதும் துஆ ...................................... 31
3. ஏழ்மை நீங்கிட ஓதும் துஆ ........................................... 32
4. உடல் வலி நீங்கிட ஓதும் துஆ ................................... 32
5. பகைவர்களின் பயம் நீங்கிட ஓதும் துஆ ................. 33
6. கடன் நீங்க ஓதும் துஆ .................................................... 33
7. வறுமை நீங்கி வளம் பெருகிட ஓதும் துஆ ............... 34
8. எழுபது வியாதிகள் குணமாக ஓதும் துஆ .............. 34
9. குழந்தைப் பேறு கிடைக்க ஓதும் துஆ ...................... 35
10. கண்திருஷ்டி நீங்க ஓதும் துஆ .................................... 35
11. நோயாளியை விசாரிக்கச் சென்றால் ஓதும் துஆ 35
12. கப்ரஸ்தானுக்குச் சென்றால் ஓதும் துஆ .................... 36
13. மனக்கசப்பு நீங்க ஓதும் துஆ ........................................ 36
14. காலை நேரத்தில் ஓதும் துஆ ........................................ 36
15. மாலை நேரத்தில் ஓதும் துஆ ........................................ 37
16. புதிய பிறையைப் பார்க்கும் போது ஓதும் துஆ 37
17. நோன்பு திறந்தபின் ஓதும் துஆ ................................... 37
18. லைலத்துல் கத்ரு இரவில் ஓதும் துஆ ...................... 38
19. மணமக்களை வாழ்த்தி ஓதும் துஆ ............................ 38

20. வீட்டினுள் நுழையும் போது ஓதும் துஆ .................. 38
21. வீட்டிலிருந்து வெளியேறும் போது ஓதும் துஆ ..... 38
22. மழைவேண்டி ஓதும் துஆ .............................................. 39
23. மழை பெய்யும்போது ஓதும் துஆ ................................ 39
24. பள்ளிக்குள் நுழையும் போது ஓதும் துஆ ................ 39
25. பள்ளியை விட்டு வெளியேறும் போது ஓதும் துஆ 39
26. மனைவியுடன் சேரும்போது ஓதும் துஆ .................. 40
27. உணவுக்கு முன் ஓதும் துஆ ......................................... 40
28. ஆரம்பத்தில் பிஸ்மில்லாஹ் கூற மறந்துவிட்டால் 40
29. உணவுண்டு முடித்தபின் ஓதும் துஆ .......................... 40
30. ஆடை அணியும்போது ஓதும் துஆ ........................... 41
31. தூங்க ஆரம்பிக்கும்போது ஓதும் துஆ ...................... 41
32. தூங்கி எழுந்தபின் ஓதும் துஆ ..................................... 41
33. கழிவறைக்குள் நுழையும்போது ஓதும் துஆ ............ 41
34. கழிவறையிலிருந்து வெளியேறிய பின் ஓதும் துஆ 42
35. உளூச் செய்த பின் ஓதும் துஆ .................................... 42

## ● அன்றாட சுன்னத்துகள்

1. பள்ளிவாசலுக்குள் நுழைவதன் சுன்னத்துகள் ........... 43
2. பள்ளிவாசலிலிருந்து வெளியேறுவதன் சுன்னத்துகள் 43
3. குர்ஆன் ஓதுவதன் சுன்னத்துகள் ................................. 45
4. பயான் மஜ்லிஸ்களில் அமர்வதின் சுன்னத்துகள் 45
5. தண்ணீர் அருந்துவதன் சுன்னத்துகள் .......................... 47
6. உணவருந்துவதன் சுன்னத்துகள் .................................... 47
7. சபையில் பேணவேண்டிய சுன்னத்துகள் .................... 49
8. வீட்டுக்குள் நுழைவதன் சுன்னத்துகள் ......................... 51
9. விருந்தின் சுன்னத்துகள் .................................................... 52

10. ஆடை அணிவதன் சுன்னத்துகள் ................................ 53
11. முஸாபஹா செய்வதன் சுன்னத்துகள் ........................... 55
12. துஆச் செய்வதின் சுன்னத்துகள் .................................. 56
13. ஸலாம் சொல்வதன் சுன்னத்துகள் ................................ 57
14. எச்சில் துப்புதல், தும்முவதின் சுன்னத்துகள் ............. 58
15. பயணத்தின் சுன்னத்துகள் ................................................ 59
16. மலஜலம் கழித்தலின் சுன்னத்துகள் ............................... 61
17. தூக்கத்தின் சுன்னத்துகள் ................................................ 62
18. நகம் வெட்டுவதன் சுன்னத்துகள் .................................. 64
19. செருப்பு அணிவதன் சுன்னத்துகள் ............................... 65
20. நலம் விசாரிப்பதன் சுன்னத்துகள் ................................. 66

## ● அவசியமான சட்டங்கள்

1. தொழுகையை ஆரம்பிப்பதற்கு முன் ........................... 68
2. தொழுகையை ஆரம்பிக்கும் போது ............................. 69
3. நிலையில் கவனிக்க வேண்டியவை ............................... 70
4. ருகூஉ செய்யும் சரியான முறை ..................................... 71
5. ருகூஉவிலிருந்து எழுந்திருக்கும்போது ....................... 72
6. ஸஜ்தாவுக்குச் செல்லும்போது ........................................ 72
7. ஸஜ்தாச் செய்யும் சரியான முறை ................................. 73
8. இரண்டு ஸஜ்தாக்களுக்கிடையில் அமரும் முறை 74
9. இரண்டாவது ஸஜ்தாவும் எழுந்திருத்தலும் ................ 75
10. இருப்பில் அமரும் முறை ................................................. 75
11. ஸலாம் கொடுத்தலின் சரியான முறை .......................... 76
12. துஆச் செய்யும் முறை ..................................................... 76
13. பெண்கள் தொழும்முறை ................................................ 77
14. தொழுகையும் ஆடையும் ................................................ 80

15. வாகனத்தில் தொழுதல் ........ 81
16. நாற்காலியில் அமர்ந்து தொழுதல் ........ 82
17. தொழுகையில் பிந்தி வந்தால் ........ 83
18. இதர சட்டங்கள் ........ 87

## ● அருள்மறை சூராக்களின் சிறப்புகள்

1. சூரத்துல் ஃபாத்திஹாவின் சிறப்புகள் ........ 93
2. சூரத்துல் பகராவின் சிறப்புகள் ........ 95
3. சூரா ஆலஇம்ரானின் சிறப்புகள் ........ 97
4. சூரத்துந் நிஸாவின் சிறப்புகள் ........ 97
5. சூரத்துல் மாஇதாவின் சிறப்புகள் ........ 98
6. சூரத்துல் அன்ஆமின் சிறப்புகள் ........ 99
7. சூரா அன்பால், சூரா தௌபாவின் சிறப்புகள் ........ 100
8. சூரா ஹூதின் சிறப்புகள் ........ 101
9. சூரா யூசுஃபின் சிறப்புகள் ........ 101
10. சூரத்துல் இஸ்ராவின் சிறப்புகள் ........ 102
11. சூரத்துல் கஹ்ஃபின் சிறப்புகள் ........ 102
12. சூரா தாஹாவின் சிறப்புகள் ........ 102
13. சூரத்துந் நூரின் சிறப்புகள் ........ 103
14. சூரா ஸஜ்தாவின் சிறப்புகள் ........ 103
15. சூரத்துல் அஹ்ஜாபின் சிறப்புகள் ........ 103
16. சூரா யாஸீனின் சிறப்புகள் ........ 104
17. சூரா ஸாஃப்பாத்தின் சிறப்புகள் ........ 104
18. சூரா துஹானின் சிறப்புகள் ........ 104
19. சூரத்துல் கமரின் சிறப்புகள் ........ 104
20. சூரத்துர் ரஹ்மானின் சிறப்புகள் ........ 105
21. சூரத்துல் வாகிஆவின் சிறப்புகள் ........ 105

22. சூரத்துல் ஹஷ்ரின் சிறப்புகள் ........................................ 105
23. சூரத்துல் முல்கின் சிறப்புகள் ........................................ 105
24. சூரத்துல் கலமின் சிறப்புகள் ........................................ 106
25. சூரத்துல் ஜின்னின் சிறப்புகள் ........................................ 106
26. சூரா முஜ்ஜம்மிலின் சிறப்புகள் ........................................ 106
27. சூரத்துன் னபாவின் சிறப்புகள் ........................................ 106
28. சூரா ஜில்ஜாலின் சிறப்புகள் ........................................ 106
29. சூரத்துத் தகாசுரின் சிறப்புகள் ........................................ 107
30. சூரத்துல் காஃபிரூனின் சிறப்புகள் ................................ 107
31. சூரத்துல் இக்லாஸின் சிறப்புகள் ........................................ 107
32. சூரத்துல் ஃபலக், சூரா நாஸின் சிறப்புகள் ................. 107




# அற்புதமான திக்ருகள்

### 1. நான்கு பெரும் பலன்கள்

ஹழ்ரத் அலி (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள். நபி பெருமானார் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள். எவர் தினமும் நூறுதடவை

لَا اِلٰهَ اِلَّا اللهُ الْمَلِكُ الْحَقُّ الْمُبِيْنُ

"லா இலாஹ இல்லல்லாஹுல் மலிக்குல் ஹக்குல் முபீன்"

என்று ஓதுகிறாரோ அவருக்கு வறுமையை விட்டும் பாதுகாப்பு கிடைக்கும், கப்ரின் தனிமையில் வெருட்சியான நிலையை விட்டும் நிம்மதி ஏற்படும். இந்த வார்த்தைகளை ஓதுவதால் அவருக்கு செல்வ வசதி உண்டாகும். கியாமத் நாளில் இதன் பரகத்தால் அவர் சொர்க்கம் செல்வார்.

**நூல் : ஹில்யதுல் அவ்லியா**

### 2. இருபது இலட்சம் நன்மைகள்

ஹழ்ரத் அப்துல்லாஹ் இப்னு அபீ அவ்ஃபா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்: அல்லாஹ்வின் தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள்.

لَا اِلَهَ اِلَّا اللّٰهُ وَحْدَهُ لَا شَرِيْكَ لَهُ اَحَدًا صَمَدًا لَمْ يَلِدْ وَلَمْ يُوْلَدْ وَلَمْ يَكُنْ لَهُ كُفُوًا اَحَدٌ

லாஇலாஹ இல்லல்லாஹு வஹ்தஹு லா ஷரீக்கலஹு அஹதன் ஸமதன் லம் யலித் வலம் யூலத் வலம் யகுல்லஹு கு∴புவன் அஹத்

என்று கூறுபவருக்கு அல்லாஹுதஆலா இருபது இலட்சம் நன்மைகளை அளிக்கிறான்.

**நூல் : அத்தர்ஙீப் வத்தர்ஹீப்**

மேற்கூறப்பட்ட வாசகத்தை ஒரு முறை கூறினால் 20 இலட்சம் நன்மைகள் கிடைக்கிறது. தினமும் ஐவேளை தொழுகைக்குப் பின் ஒவ்வொரு முறை கூறி வந்தால் மிக இலேசாக தினமும் ஒரு கோடி நன்மைகளைப் பெறமுடியும்.

## 3. எழுபதாயிரம் மலக்குகளின் துஆ

اَعُوْذُ بِاللّٰهِ السَّمِيْعِ الْعَلِيْمِ مِنَ الشَّيْطَانِ الرَّجِيْمِ

“அஊது பில்லாஹிஸ் ஸமிஇல் அலீம் மினஷ் ஷைத்தானிர் ரஜீம்”

என்று மூன்று தடவையும் பின்வரக்கூடிய சூரா ஹஷ்ர் உடைய கடைசி ஆயத்துகளை ஒரு தடவையும் காலை, மாலை இருவேளையும் எவர் ஓதிவருகிறாரோ, அவருக்காக காலையிலிருந்து மாலை வரையும், மாலையிலிருந்து காலை வரையும் 70,000 மலக்குகள் பாவ மன்னிப்பு வேண்டி துஆச் செய்கிறார்கள். அவர் மரணித்து விட்டால் ஷஹாதத்துடைய அந்தஸ்து அவருக்குக் கிடைக்கிறது. **நூல்: திர்மிதி, தாரமி**

## சூரா ஹஷ்ருடைய கடைசி ஆயத்துக்கள்

هُوَ اللّٰهُ الَّذِى لَا إِلَهَ إِلَّا هُوَ عَالِمُ الْغَيْبِ وَالشَّهَادَةِ
هُوَ الرَّحْمَنُ الرَّحِيمُ هُوَ اللّٰهُ الَّذِى لَا إِلَهَ إِلَّا هُوَ
الْمَلِكُ الْقُدُّوسُ السَّلَامُ الْمُؤْمِنُ الْمُهَيْمِنُ الْعَزِيزُ الْجَبَّارُ
الْمُتَكَبِّرُ سُبْحَانَ اللّٰهِ عَمَّا يُشْرِكُونَ هُوَ اللّٰهُ الْخَالِقُ
الْبَارِئُ الْمُصَوِّرُ لَهُ الْأَسْمَاءُ الْحُسْنَى يُسَبِّحُ لَهُ مَا فِى
السَّمَاوَاتِ وَالْأَرْضِ وَهُوَ الْعَزِيزُ الْحَكِيمُ ۝

## 4. கடினமான வேலைகள் இலேசாக

பின் வரும் ஆயத்தை காலையும் மாலையும் ஏழு தடவை எவர் ஓதிவருவாரோ, அவரது பெரும் பெரும் கடினமான வேலைகளை அல்லாஹ் தனது பொறுப்பில் எடுத்துக் கொண்டு மிக இலகுவாக நிறை வேற்றித் தருவான். இதன் மீது நம்பிக்கையில்லாமல் அவர் ஓதினாலும் சரி.

حَسْبِىَ اللّٰهُ لَا اِلَهَ اِلَّا هُوَ عَلَيْهِ تَوَكَّلْتُ وَهُوَ
رَبُّ الْعَرْشِ الْعَظِيمِ

“ஹஸ்பியல்லாஹுூ லாஇலாஹ இல்லாஹுூவ அலைஹி தவக்கல்து வஹுூவ ரப்புல் அர்ஷில் அளீம்”

நூல்: அபூதாவூத்

## 5. கணக்கற்ற வெகுமதிகள்

எவர் காலை-மாலை இரு வேளையிலும் மூன்று தடவை பின்வரும் துஆவை ஓதுவாரோ அல்லாஹ் மறுமை நாளில் அவர் திருப்தியடையும் அளவுக்கு ஏராளமான வெகுமதிகளைக் கொடுப்பான்.

رَضِيْتُ بِاللهِ رَبًّا وَّبِالْاِسْلَامِ دِيْنًا
وَّبِمُحَمَّدٍ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ نَبِيًّا

"ரளீத்து பில்லாஹி ரப்பா வபில் இஸ்லாமி தீனா வபி முஹம்மதின் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் நபிய்யா"

**நூல் : திர்மிதி**

## 6. சொர்க்கத்தில் நுழைய

எவர் காலையில் "சையிதுல் இஸ்திஃக்பார்" ஒரு முறை ஓது வாரோ அவர் மாலை நேரத்திற்குள் மரண மடைந்து விட்டால் சொர்க்கவாசியாக ஆகிவிடுவார்.

இதேபோல் மாலையில் ஓதுபவர் காலை நேரத்திற்குள் மரணமடைந்து விட்டால் அவர் சொர்க்க வாசியாகி விடுவார். ஆனால் உள்ளத்தில் நம்பிக்கையுடன் இதனை ஓத வேண்டும்.

اَللّٰهُمَّ أَنْتَ رَبِّى لَا إِلَهَ إِلَّا أَنْتَ خَلَقْتَنِى وَأَنَا عَبْدُكَ
وَأَنَا عَلَى عَهْدِكَ وَوَعْدِكَ مَا اسْتَطَعْتُ أَعُوذُ بِكَ مِنْ شَرِّ

مَا صَنَعْتُ أَبُوءُ لَكَ بِنِعْمَتِكَ عَلَىَّ وَأَبُوءُ لَكَ بِذَنْبِى فَاغْفِرْ لِىْ فَإِنَّهُ لَا يَغْفِرُ الذُّنُوبَ إِلَّا أَنْتَ

அல்லாஹுஃம்ம அந்த ரப்பி லாஇலாஹ இல்லா அந்த கலக்தனீ வஅன அப்துக வஅனஅலா அஹ்திக வவஃதிக மஸ்ததஃது. வஅஊது பிக மின் ஷர்ரி மா ஸனஃத்து அபூஉ லக பி நிஃமதிக்க அலய்ய. வஅபூஉ பிதன்ம்பி ஃபஃபிர்லீ ஃபஇன்னஹு லாயஃபிருத்துனூப இல்லா அந்த

நூல்: புகாரி

## 7. படைப்பினங்களின் தீங்குகளை விட்டும் பாதுகாப்புப் பெற

பின் வரும் வார்த்தைகளை காலையிலும் மாலையிலும் ஒரு முறை ஓதிவந்தால் மனிதர்கள், ஜின்களின் தீங்குகளை விட்டும் பாதுகாப்பு கிடைக்கும்.

أَعُوذُ بِكَلِمَاتِ اللهِ التَّامَّاتِ مِنْ غَضَبِهِ وَعِقَابِهِ وَشَرِّ عِبَادِهِ وَمِنْ هَمَزَاتِ الشَّيَاطِينِ وَأَعُوذُ بِكَ رَبِّ أَنْ يَحْضُرُونَ

அஊது பிகலிமாதில்லாஹித் தாம்மாத்தி மின் ஙளபிஹி வ இகாபிஹி வ ஷர்ரி இபாதிஹி வமின் ஹமஜாதிஷ் ஷையாதீனி வஅஊதுபிக ரப்பி அய்யஹ்ளுரூன்

நூல் : திர்மிதி

## 8. ஆயிரம் ஆயத்துகளுக்குச் சமமான நன்மை

ஹழ்ரத் அப்துல்லாஹ் இப்னு உமர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

“தினமும் ஆயிரம் ஆயத்துக்களை உங்களால் ஓதமுடியாதா? என நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் ஸஹாபாக்களிடம் கேட்ட போது ஆயிரம் ஆயத்துக்களை ஒரு நாளில் எப்படி ஓத முடியும்? என்று ஸஹாபாக்கள் கூறினர். அதற்கு நபியவர்கள் உங்களால் அல்ஹாக்கு முத்தகாசுர் ஓத முடியாதா?” என்று கேட்டார்கள்.

أَلْهَاكُمُ التَّكَاثُرُ ۝ حَتَّىٰ زُرْتُمُ الْمَقَابِرَ ۝ كَلَّا سَوْفَ تَعْلَمُونَ ۝ ثُمَّ كَلَّا سَوْفَ تَعْلَمُونَ ۝ كَلَّا لَوْ تَعْلَمُونَ عِلْمَ الْيَقِينِ ۝ لَتَرَوُنَّ الْجَحِيمَ ۝ ثُمَّ لَتَرَوُنَّهَا عَيْنَ الْيَقِينِ ۝ ثُمَّ لَتُسْأَلُنَّ يَوْمَئِذٍ عَنِ النَّعِيمِ ۝

அல்ஹாகுமுத்தகாஸுரு ஹத்தா ஜுர்துமுல் மகாபிர் கல்லா ஸவ்ஃப தஃலமூன சும்ம கல்லா ஸவ்ஃப தஃலமூன் கல்லா லவ் தஃலமூன இல்மல் யகீன் லதரவுன்னல் ஜஹீம் சும்ம லதரவுன்னஹா அய்னல் யகீன் சும்ம லதுஸ்அலுன்ன யவ்மயிதின் அனின்நயீம்

அல்குர்ஆனின் 102 வது சூராவான “அத்தகாசுர்’ சூராவை ஒரு முறை ஓதுவதால் ஆயிரம் ஆயத்துக்களை ஓதிய நன்மை கிடைக்கிறது. **நூல்: முஸ்தத்ரக்ஹாகிம்**

## 9. ஒரு நிமிடத்தில் ஒரு குர்ஆனின் நன்மை

قُلْ هُوَ اللَّهُ أَحَدٌ ۞ اللَّهُ الصَّمَدُ ۞ لَمْ يَلِدْ وَلَمْ يُولَدْ ۞
وَلَمْ يَكُن لَّهُ كُفُوًا أَحَدٌ ۞

குல்ஹுவல்லாஹு அஹத் அல்லாஹுஸ் ஸமத் லம் யலித்
வலம் யூலத் வலம் யகுன்லஹு கு:ப்வன் அஹத்

ஹழ்ரத் அபூதர்தா(ரலி)அவர்கள் அறிவிக்கிறார்கள். பெருமானார் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் ஸஹாபாக்களிடம் "உங்களால் குர்ஆனின் மூன்றில் ஒரு பகுதியை ஓரிரவில் ஓத முடியுமா?" என்று கேட்டார்கள். அதற்கு ஸஹாபாக்கள் "ஓரிரவில் மூன்றில் ஒரு பகுதியளவு எப்படி ஓத முடியும்?" என்று கூறினர். நபி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் "குல்ஹுவல்லாஹு அஹது" (என்ற சூரா) குர்ஆனின் மூன்றில் ஒரு பகுதிக்குச் சமமானது. என்று கூறினார்கள். **நூல்: முஸ்லிம்**

ஒரு முறை இந்த சூராவை ஓதுவதால் குர்ஆனின் மூன்றில் ஒரு பகுதி ஓதிய நன்மை கிடைக்கிறது எனில் ஒரு நிமிடத்துக்கும் குறைவான நேரத்தில் மூன்று முறை இந்த சூராவை ஓதி முழு குர்ஆன் ஓதிய நன்மையைப் பெற்றுக் கொள்ள முடியும்.

## 10. கேட்டவையனைத்தும் கிடைக்கப் பெற

ஹழ்ரத்ஸமுராபின் ஜுன்துப்(ரலி) கூறுகிறார்கள். எவர் காலையிலும் மாலையிலும்

اَللّٰهُمَّ اَنْتَ خَلَقْتَنِىْ وَاَنْتَ تَهْدِيْنِىْ وَاَنْتَ تُطْعِمُنِىْ وَاَنْتَ تَسْقِيْنِىْ وَاَنْتَ تُمِيْتُنِىْ وَاَنْتَ تُحْيِيْنِىْ

“அல்லாஹும்ம அந்த கலக்தனீ, வ அந்த தஹ்தீனீ வ அந்த துத்இமுனீ வ அந்த தஸ்கீனீ வ அந்த துமீதுனீ வஅந்த துஹ்யீனீ”

என்று ஓதி விட்டு துஆச் செய்கிறாரோ அவர் கேட்டதை கண்டிப்பாக அல்லாஹ் கொடுப்பான். ஹழ்ரத் அப்துல்லாஹ் இப்னு ஸலாம் (ரலி) கூறுகிறார்கள். நபி மூஸா (அலை) அவர்கள் தினமும் ஏழு முறை இந்த வார்த்தைகளைக் கூறி துஆச் செய்து வந்தார்கள். அவர்கள் கேட்டவை அனைத்தையும் அல்லாஹ் அவர்களுக்குக் கொடுத்தான்.

**நூல்: தப்ரானி**

## 11. அற்புத பலன் தரும் ஆயத்துல் குர்ஸீ

நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள்.

“எவரொருவர் ஒவ்வொரு ஃபர்ளான தொழுகைக்குப் பிறகும் ஆயத்துல் குர்ஸியை ஒதி வருகிறாரோ அவர் சொர்க்கத்தில் நுழையத் தடை யா யிருப்பது மரணத்தைத் தவிர வேறெதுவுமில்லை .” (அதாவது மரணித்தவுடன் நேரே சொர்க்கம் சென்றிடுவார்). **அறிவிப்பாளர் : அபூ உமாமா (ரலி)**

**நூல்: நஸயீ**

“ஒருவர் இரவு படுக்கும்போது ஆயத்துல் குர்ஸியை ஓதினால் அவரை பாதுகாக்க அல்லாஹ் ஒரு மலக்கை நியமிக்கிறான். காலை வரை ஷைத்தான் அவரை நெருங்கமாட்டான்.” **நூல் : புகாரி**

எந்த இடங்களில் ஜின், ஷைத்தானின் பயம் ஏற்படுகிறதோ அங்கே “ஆயத்துல் குர்ஸியை” ஓதினால் அங்கு ஜின், ஷைத்தான் இருப்பின் உடனே வெளியேறிவிடும்.

மேலும் “ஆயத்துல் குர்ஸியில்” 170 எழுத்துக்கள் இருக்கின்றன. எவர் அவற்றின் எண்ணிக்கையளவு அதனை ஓதி வருகிறாரோ அவருடைய தேவைகளை அல்லாஹ் நிறைவேற்றி வைத்து, அவருடைய கவலை, துன்பங்கள் அனைத்தையும் போக்கி வைத்து, அவருடைய உணவையும் விசாலமாக்கி, அவரது நோக்கத்தையும் நிறைவேற்றி வைத்திடுவான்.

اَللّٰهُ لَا إِلٰهَ إِلَّا هُوَ الْحَيُّ الْقَيُّومُ لَا تَأْخُذُهُ سِنَةٌ
وَلَا نَوْمٌ لَّهُ مَا فِي السَّمَاوَاتِ وَمَا فِي الْأَرْضِ مَن
ذَا الَّذِي يَشْفَعُ عِندَهُ إِلَّا بِإِذْنِهِ يَعْلَمُ مَا بَيْنَ أَيْدِيهِمْ
وَمَا خَلْفَهُمْ وَلَا يُحِيطُونَ بِشَيْءٍ مِّنْ عِلْمِهِ إِلَّا
بِمَا شَاءَ وَسِعَ كُرْسِيُّهُ السَّمَاوَاتِ وَالْأَرْضَ وَلَا يَئُودُهُ
حِفْظُهُمَا وَهُوَ الْعَلِيُّ الْعَظِيمُ ۝

அல்லாஹுூ லாஇலாஹ இல்லா ஹுூவல் ஹய்யுல் கய்யூம் லாத.:.குதுஹூ ஸினதுன் வலா நவ்முன். லஹுூ மா .:.பிஸ்ஸமாவா(த்)தி வமா.:.பில் அர்ளி மன்தல்லதீ யஷ்.:.பஉ இந்தஹூ இல்லா பி இத்னிஹி ய.:.லமு மாபைன அய்தீஹிம் வ மா .:.கல்.:.பஹுூம் வலாயுஹீ(த்)தூன பிஷையின் மின் இல்மிஹி இல்லா பிமாஷாஅ வஸிஅ குர்ஸிய்யுஹுூஸ் ஸமாவாத்தி வல்அர்ள வலாயஊதுஹுூ ஹி.:.ப்ளுஹுூமா வஹுூவல் அளிய்யுல் அளீம்.

## 12. பத்து இலட்சம் நன்மைகள்

ஹஜ்ரத் உமர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள். ஒருவர் கடை வீதியில் நுழையும் போது

لَا اِلَهَ اِلَّا اللهُ وَحْدَهُ لَا شَرِيْكَ لَهُ لَهُ الْمُلْكُ وَلَهُ الْحَمْدُ يُحْيِيْ وَيُمِيْتُ وَهُوَ عَلَى كُلِّ شَيْئٍ قَدِيْر

லா இலாஹ இல்லல்லாஹு வஹ்தஹு லா ஷரீக்கலஹு லஹுல் முல்க்கு வலஹுல் ஹம்து யுஹ்யீ வயுமீத்து வஹுவ ஹைய்யுன் லாயமூத்து பியதிஹில் ஹைரு வஹுவ அலா குல்லி ஷைஇன் கதீர்

என்று கூறினால், அல்லாஹு தஆலா அவருக்கு பத்து இலட்சம் நன்மைகளை எழுதுகிறான். அவருடைய பத்து இலட்சம் தீமைகளை அழிக்கிறான். அவருக்கு பத்து இலட்சம் தகுதிகளை உயர்த்துகிறான் என நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள். **நூல்: திர்மிதி**

## 13. 1,24,000 நன்மைகளைப் பெற

ஹழ்ரத் அபூதல்ஹா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள். "எவரொருவர் லாஇலாஹ இல்லல்லாஹ்" என்னும் கலிமாவைச் சொல்வாரோ அவருக்கு சொர்க்கம் கடமையாகிவிடும்.

எவர் சுப்ஹானல்லாஹி வபிஹம்திஹி என்று 100 முறை சொல்வாரோ அவருக்காக ஒரு இலட்சத்து இருபத்தி நான்காயிரம் (1,24,000) நன்மைகள் எழுதப்படுகின்றன என்று ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள். **நூல்: முஸ்தத்ரக் ஹாகிம்**

# அருமையான ஸலவாத்துகள்

## 1. எழுபது மலக்குகளை களைப்படைய வைக்கும் ஸலவாத்

جَزَى اللهُ عَنَّا مُحَمَّدًا مَا هُوَ اَهْلُهُ

ஜஜல்லாஹு அன்னா முஹம்மதன் மாஹுவ அஹ்லுஹு

எவர் இந்த ஸலவாத்தை ஓதுகிறாரோ அவர் எழுபது மலக்குகளை ஆயிரம் நாட்கள் வரை சிரமத்திற்குள்ளாக்கி விடுகிறார். (அதாவது ஆயிரம் நாட்கள் வரை இந்த ஸலவாத்துக்கு நன்மை எழுதி, எழுதி அவர்கள் களைத்துப் போய் விடுகிறார்கள்) என்று நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள்.

**- அறிவிப்பாளர் : இப்னு அப்பாஸ் (ரலி)**
**நூல் : தப்ரானி**

## 2. பாச நபியின் (ஸல்) பரிந்துரையை பெற்றுத் தரும் ஸலவாத்

اَللّٰهُمَّ صَلِّ عَلَى مُحَمَّدٍ وَاَنْزِلْهُ الْمَقْعَدَ الْمُقَرَّبَ عِنْدَكَ يَوْمَ الْقِيَامَةِ

அல்லாஹும்ம ஸல்லி அலா முஹம்மதின் வ அன்ஜில்ஹுல் மக்அதல் முகர்ரப இந்தக யவ்மல் கியாமா

எவர் இந்த ஸலவாத்தை ஓதி வருகிறாரோ அவருக்கு (மறுமையில்) எனது பரிந்துரை வாஜிபாகிவிடும் என்று நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள். **நூல்: பஜ்ஜார்**

## 3. பெரிய தட்டில் அமல்களை நிறுக்க உதவும் ஸலவாத்

اَللّٰهُمَّ صَلِّ عَلٰى مُحَمَّدِ النَّبِىِّ الْاُمِّىِّ وَاَزْوَاجِهٖ اُمَّهَاتِ الْمُؤْمِنِيْنَ وَذُرِّيَّتِهٖ وَاَهْلِ بَيْتِهٖ كَمَا صَلَّيْتَ عَلٰى اِبْرَاهِيْمَ اِنَّكَ حَمِيْدٌ مَّجِيْدٌ

அல்லாஹும்ம ஸல்லி அலா முஹம்மதின்னபிய்யில் உம்மிய்யி வஅஜ்வாஜிஹி உம்மஹாத்தில் மு.:மினீன வதுர்ரியதிஹி வஅஹ்லி பைத்திஹி கமா ஸல்லைத்த அலா இப்ராஹீம இன்னக்க ஹமீதும் மஜீத்.

எவர் தனது ஸலவாத்தின் நன்மை பெரிய தட்டில் வைத்து நிறுக்கப்படவேண்டுமென விரும்புகிறாரோ அவர் மேற்கண்ட ஸலவாத்தை ஓதட்டும் என்று நபிகள் பெருமானார் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள். **- நூல்: அபூதாவூத்**

## 4. இமாம் ஷாஃபிஈ (ரஹ்) ஓதிய இனிய ஸலவாத்

اَللّٰهُمَّ صَلِّ عَلٰى مُحَمَّدٍ كُلَّمَا ذَكَرَهُ الذَّاكِرُوْنَ وَصَلِّ عَلٰى مُحَمَّدٍ كُلَّمَا غَفَلَ عَنْ ذِكْرِهِ الْغَافِلُوْنَ

அல்லாஹும்ம ஸல்லி அலா முஹம்மதின் குல்லமா
தகரஹுத் தாகிருன் வஸல்லி அலா முஹம்மதின் குல்லமா
ஙஃபல அன் திக்ரிஹில் ஙாஃபிலுரன்

இமாம் ஷாஃபிஈ (ரஹ்) அவர்களின் வஃபாத்திற்குப் பிறகு அவர்களின் மாணவர்களுள் ஒருவரான இமாம் முஜ்னி (ரஹ்) அவர்கள் கனவில் கண்டு அல்லாஹ் உங்களுடன் எப்படி நடந்து கொண்டான்? என்று கேட்டார்கள். அதற்கு இமாம் ஷாஃபிஈ (ரஹ்) ‘அல்லாஹுதஆலா நான் ஓதிவந்த ஒரு ஸலவாத்தின் பரக்கத்தால் என்னை மன்னித்து, கண்ணியத்தோடும், மரியாதையோடும் என்னை சொர்க்கத்திற்கு அழைத்துச் செல்லுமாறு கட்டளையிட்டான்’ என்று கூறி மேற்கண்ட ஸலவாத்தைக் கூறினார்கள்.

## 5. துன்பங்களை தீர்க்கும் துன்ஜீனா ஸலவாத்

اَللّٰهُمَّ صَلِّ عَلَى سَيِّدِنَا مُحَمَّدٍ صَلَاةً تُنْجِينَا بِهَا
مِنْ جَمِيعِ الْأَهْوَالِ وَالْآفَاتِ وَتَقْضِى لَنَا بِهَا جَمِيعَ
الْحَاجَاتِ وَتُطَهِّرُنَا بِهَا مِنْ جَمِيعِ السَّيِّئَاتِ وَتَرْفَعُنَا
بِهَا عِنْدَكَ أَعْلَى الدَّرَجَاتِ وَتُبَلِّغُنَا بِهَا أَقْصَى
الْغَايَاتِ مِنْ جَمِيعِ الْخَيْرَاتِ فِى الْحَيَاةِ وَبَعْدَ الْمَمَاتِ
اِنَّكَ عَلَى كُلِّ شَيْءٍ قَدِيْرٌ

அல்லாஹும்ம ஸல்லி அலா ஸைய்யிதினா முஹம்மதிவ்
வஅலா ஆலி ஸைய்யிதினா முஹம்மதின் ஸலாதன் துன்ஜீனா

பிஹா மின் ஜமீஇல் அஹ்வாலி வல்ஆ..பாத்தி வதக்ளீ லனா பிஹா ஜமீஅல் ஹாஜாத்தி வதுதஹ்ஹிருனா பிஹா மின் ஜமீஇஸ்ஸய்யிஆத்தி வதர்..பஉனா பிஹா அ..லத் தரஜாத்தி வதுபல்லிகுனா பிஹா அக்ஸல் ஙாயாத்தி மின் ஜமீஇல் ஹைராத்தி ..பில் ஹயாத்தி வ ப..தல் மமாத்தி இன்னக்க அலா குல்லி ஷைஇன் கதீர்.

இந்த ஸலவாத்துக்கு ‘துன்ஜீனா ஸலவாத்’ என்று பெயர். இந்த ஸலவாத் சம்பந்தமாக பிரபலமானதொரு சம்பவம் ஆதாரப் பூர்வமான நூல்களில் எழுதப்பட்டுள்ளது. ஷைஹு மூஸா ளரீர் (ரஹ்) என்ற பெரியார் தனக்கு நேர்ந்த ஒரு நிகழ்வைக் கூறுகிறார்கள்.

நான் ஒரு கப்பலில் சென்று கொண்டிருந்தேன். திடீரென அது மூழ்க ஆரம்பித்தது. அப்போது சிறு தூக்கம் என்னை ஆட்கொண்டது. அதில் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கனவில் தோன்றி இந்த ஸலவாத்தைக் கற்றுக் கொடுத்து விட்டு, கப்பலில் உள்ளவர்கள் இதனை ஆயிரம் முறை ஓதச் சொல்லுமாறு கூறினார்கள். அதன்படி நாங்கள் இதனை முன்னூறு முறைதான் ஓதியிருப்போம். அதற்குள் அல்லாஹ் தன் கிருபையினால் கப்பல் மூழ்கிடாமல் பாதுகாத்து விட்டான்.

இந்த ஸலவாத்துக்கு இன்னும் நிறைய சிறப்புகள் உள்ளன. அற்புதமான கருத்துக்களைக் கொண்ட ஸலவாத் இது.

## 6. ஸதகாவின் நன்மையை தரும் ஸலவாத்

اللَّهُمَّ صَلِّ عَلَى سَيِّدِنَا مُحَمَّدٍ عَبْدِكَ وَرَسُولِكَ وَصَلِّ عَلَى المُؤْمِنِينَ وَالمُؤْمِنَاتِ وَالمُسْلِمِينَ وَالمُسْلِمَاتِ

அல்லாஹும்ம ஸல்லி அலா முஹம்மதின் அப்திக்க வரசூலிக்க வஸல்லி அலல் மு.:.மினீன வல்மு.:.மினாத்தி வல் முஸ்லிமீன வல்முஸ்லிமாத்தி.

ஸதகா செய்யுமளவிற்கு எவரிடம் பொருள் வசதி இல்லையோ அவர் இந்த ஸலவாத்தை ஓதிக் கொள்ளட்டும் என்று நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள். **- அறிவிப்பாளர் : அபூஸயீத் குத்ரி (ரலி)**

**நூல் : ஸஹீஹ் இப்னு ஹிப்பான்**

இதனை ஓதுவதால் ரிஜ்கில் பரக்கத் ஏற்படும் என்று வேறொரு அறிவிப்பில் வந்துள்ளது.

## 7. காருண்ய நபியை கனவில் காட்டும் ஸலவாத்

اللَّهُمَّ صَلِّ عَلى رُوْحِ سَيِّدِنَا مُحَمَّدٍ فِى الأَرْوَاحِ وَعَلَى جَسَدِهِ فِى الأَجْسَادِ وَعَلَى قَبْرِهِ فِى الْقُبُوْرِ

அல்லாஹும்ம ஸல்லி அலா ரூஹி ஸையிதினா முஹம்மதின் .:.பில்அர்வாஹி வஅலா ஜஸதிஹி .:.பில்அஜ்ஸாதி வஅலா கப்ரிஹி .:.பில்குபூர்

இந்த ஸலவாத் பற்றி பெருமானார் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள்;

எவர் என்து மீது இந்த ஸலவாத்தைக் கூறுகிறாரோ அவர் என்னை கனவில் காண்பார். என்னை கனவில் காண்பவருக்கு மறுமையில் நான் பரிந்துரை செய்வேன். யாருக்கு நான் பரிந்துரை செய்கிறேனோ அவர் எனது ஹவ்ளில் இருந்து நீர் பருகுவார். அல்லாஹ் அவரது உடலை நரகத்திற்கு ஹராமாக ஆக்கிவிடுவான். **நூல்: அல்கவ்லுல் பதீஉ**

## 8. ஆறு இலட்சம் நன்மைகளை அள்ளித்தரும் ஸலவாத்

اَللّٰهُمَّ صَلِّ عَلَى سَيِّدِنَا وَمَوْلَانَا مُحَمَّدٍ عَدَدَ مَا فِى عِلْمِ اللهِ صَلوٰةً دَائِمَةً بِدَوَامِ مُلْكِ اللهِ

அல்லாஹும்ம ஸல்லி அலா சையிதினா வமவ்லானா முஹம்மதின் அதத மா:.பீ இல்மில்லாஹி ஸலாதன் தாஇமதன் பிதவாமி முல்கில்லாஹ்

சையத் அலி பின் யூசுஃப் மதனி (ரஹ்) அவர்கள் ஹஜ்ரத் ஜலாலுத்தீன் சுயூத்தி (ரஹ்) அவர்களின் வாயிலாக அறிவிக்கிறார்கள். இந்த ஸலவாத்தை ஒரு முறை ஓதினால் ஆறு இலட்சம் ஸலவாத் ஓதிய நன்மை கிடைக்கும். இதனை தினமும் ஆயிரம் முறை ஓதுபவர் ஈருலகிலும் ஈடேற்றம் பெற்றவராவார். **- நூல் : தலாயிலுல் கைராத்**

## 9. வறுமையை நீக்கி வளம் தரும் ஸலவாத்

اَللّٰهُمَّ صَلِّ عَلَى سَيِّدِنَا مُحَمَّدٍ وَ عَلَى آلِ سَيِّدِنَا مُحَمَّدٍ وَهَبْ لَنَا اَللّٰهُمَّ مِنْ رِزْقِكَ الْحَلَالِ الطَّيِّبِ الْمُبَارَكِ مَا تَصُوْنُ بِهِ وُجُوْهَنَا عَنِ التَّعَرُّضِ اِلَى اَحَدٍ مِّنْ خَلْقِكَ

அல்லாஹும்ம ஸல்லி அலா சையிதினா முஹம்மதின் வஅலா ஆலி சையிதினா முஹம்மதின் வஹப்லனா அல்லாஹும்ம மின் ரிஜ்கிகல் ஹலாலித் தைய்யிபில் முபாரக்கி மாதஸூனுபிஹி வுஜூஹனா அனித்தஅர்ருளி இலா அஹதிம்மின் ஹல்கிக்க

ஹஜ்ரத் அபூஅப்துல்லாஹ் குஸ்தலானி (ரஹ்) அவர்கள் கனவில் பெருமானார் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களைப் பார்த்து தம் வறுமை நிலையை முறையிட்டபோது, இந்த ஸலவாத்தை ஓதிவருமாறு பெருமானார் அவரை பணித்தார்கள். **- நூல் : அல்கவ்லுல் பதீஉ**

## 10. படைப்புகள் அனைத்துக்கும் சமமான நன்மை தரும் ஸலவாத்

اَللّٰهُمَّ صَلِّ عَلَى سَيِّدِنَا مُحَمَّدِ النَّبِيِّ عَدَدَ مَنْ صَلَّى
عَلَيْهِ مِنْ خَلْقِكَ وَصَلِّ عَلَى مُحَمَّدِ النَّبِيِّ كَمَا يَنْبَغِى
لَنَا اَنْ نُّصَلِّىَ عَلَيْهِ وَصَلِّ عَلَى مُحَمَّدِ النَّبِيِّ كَمَا اَمَرْتَنَا
اَنْ نُصَلِّىَ عَلَيْهِ

அல்லாஹும்ம ஸல்லி அலா முஹம்மதினின் னபிய்யி அதத மன் ஸல்லா அலைஹி மின் ஹல்கிக்க அல்லாஹும்ம ஸல்லி அலா முஹம்மதின் னபிய்யி கமா யம்பகி லனா அன்னுஸல்லிய அலைஹி வஸல்லி அலா முஹம்மதினின் னபிய்யி கமா அமர்தனா அன்னுஸல்லிய அலைஹி

ஹஜ்ரத் அபூபக்ர் (ரலி) அவர்கள் கூறுகிறார்கள்;

நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுடன் நான் இருந்த போது ஒரு மனிதர் நபியவர்களிடம் வந்து ஸலாம் கூறினார். நபியவர்கள் அவரது ஸலாமுக்கு பதிலளித்தார்கள். அப்போது அவர்களின் முகம் சந்தோசத்தால் பிரகாசமானது. அவரை தமக்கருகில் அமர வைத்தார்கள்.

பிறகு அவர் தாம் வந்த வேலையை முடித்துக் கொண்டு எழுந்து சென்ற போது நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள், 'அபூபக்ரே! இந்த மனிதர் எப்படிப்பட்ட வரென்றால் இவ்வுலகிலுள்ள படைப்புகள் அனைத்தின் அமலளவுக்கு இவர் ஒருவரின் அமல் தினமும் அல்லாஹ்விடம் சமர்பிக்கப்படுகிறது" என்று என்னிடம் கூறினார்கள்.

'அல்லாஹ்வின் தூதரே! அவருக்கு இவ்வளவு நன்மைகள் எப்படி கிடைக்கின்றன?' என்று நான் கேட்டேன். நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள்; 'இவர் காலையில் எழும்போது என் மீது பத்து முறை ஸலவாத் ஓதுகிறார். அந்த ஸலவாத்தின் நன்மை அனைத்து படைப்புகளின் ஸலவாத்துடைய நன்மைகளுக்குச் சமமானது என்று கூறினார்கள்.

அல்லாஹ்வின் தூதரே! அந்த ஸலவாத் எது என்று கூறுங்கள் என்று நான் கேட்டேன். நபியவர்கள் இந்த ஸலவாத்தை கூறினார்கள். **நூல்: தாரகுத்னி**

## 11. நாட்டங்களை நிறைவேற்றிடும் நாரியா ஸலவாத்

اَللّٰهُمَّ صَلِّ صَلَاةً كَامِلَةً وَسَلِّمْ سَلَامًا تَامًّا عَلَى سَيِّدِنَا مُحَمَّدٍ تَنْحَلُّ بِهِ الْعُقَدُ وَتَنْفَرِجُ بِهِ الْكُرَبُ وَتُقْضَى بِهِ الْحَوَائِجُ وَتُنَالُ بِهِ الرَّغَائِبُ وَحُسْنُ الْخَوَاتِمِ وَيُسْتَسْقَى الْغَمَامُ بِوَجْهِهِ الْكَرِيمِ وَعَلَى آلِهِ وَصَحْبِهِ فِي كُلِّ لَمْحَةٍ وَنَفَسٍ بِعَدَدِ كُلِّ مَعْلُومٍ لَكَ

அல்லாஹும்ம ஸல்லி ஸலாதன் காமிலதன் வஸல்லிம்
ஸலாமன் தாம்மன் அலா சையிதினா முஹம்மதினில்லதீ
தன்ஹல்லு பிஹில் உகது வதன்ஃபரிஜு பிஹில் குரபு
வதுக்ளா பிஹில் ஹவாயிஜு வதுனாலு பிஹிர் ரகாயிபு
வஹுஸ்னுல் ஹவாத்திமி வயுஸ்தஸ்கல் கமாமு
பிவஜ்ஹிஹில் கரீம். வஅலா ஆலிஹி வஸஹ்பிஹி ஃபீகுல்லி
லம்ஹதின் வநஃபஸின் பிஅததி குல்லி மஃலூமில்லக்

நாரியா ஸலவாத் என்ற இந்த பிரபலமான ஸலவாத்தினை முஸ்லிம்கள் ஓரிடத்தில் ஒன்று சேர்ந்து 4444 தடவைகள் ஓதும் போது அவர்களின் நாட்டங்கள் நிறைவேறும். அவர்களின் துன்பம், துயரங்கள் தீரும். இது அனுபவப்பூர்வமாக பலன் காணப்பட்ட ஸலவாத் ஆகும். இதற்கு ஸலவாத்தே தஃப்ரீஜிய்யா என்ற பெயரும் உண்டு.

உ.பி. மாநிலம் ஸஹாரன்பூரிலுள்ள பிரபல அரபி கலாசாலையான மத்ரஸா மளாஹிருல் உலூமின் தலைமைப் பேராசிரியர் மௌலானா முஹம்மது ஆகில் சாஹிப் தாமத் பரகாதுஹும் அவர்கள் தங்களின் முக்தஸர் ஃபளாயிலே தரூத் என்ற நூலில் இந்த ஸலவாத்தினை குறிப்பிட்டுள்ளார்கள்.

## 12. சிறப்புகளை ஈந்திடும் சிறந்த ஸலவாத்

சிறியதும் பெரியதுமான பல்வேறு ஸலவாத்துகள் ஹதீஸ்களில் வந்திருந்தாலும் அவற்றில் மிகச்சிறந்த ஸலவாத் தொழுகையின் கடைசி இருப்பில் நாம் ஓதும் ‘தரூதே இப்ராஹீம்‘ என்ற ஸலவாத்துதான். இது சிறந்த ஸலவாத்தாக இருப்பதால்தான் தொழுகையில் ஓதுமாறு மார்க்கம் கட்டளையிட்டுள்ளது.

எனவே தொழுகைக்கு வெளியிலும் இந்த ஸலவாத்தை அதிகமாக ஓதி வரவேண்டும். மிக அதிக நன்மைகளை பெற்றுத்தரும் இந்த ஸலவாத் தொழுகையில் ஓத அனுமதிக்கப்பட்டிருப்பதே இதன் சிறப்புக்கு பெரும் ஆதாரமாகும்.

## தரூதே இப்ராஹீம்

اللَّهُمَّ صَلِّ عَلَى مُحَمَّدٍ وَعَلَى آلِ مُحَمَّدٍ كَمَا صَلَّيْتَ عَلَى إِبْرَاهِيمَ وَعَلَى آلِ إِبْرَاهِيمَ إِنَّكَ حَمِيدٌ مَجِيدٌ اللَّهُمَّ بَارِكْ عَلَى مُحَمَّدٍ وَعَلَى آل مُحَمَّدٍ كَمَا بَارَكْتَ عَلَى إِبْرَاهِيمَ وَعَلَى آلِ إِبْرَاهِيمَ إِنَّكَ حَمِيدٌ مَجِيدٌ

அல்லாஹும்ம ஸல்லி அலா முஹம்மதிவ் வஅலா ஆலி முஹம்மதின் கமா ஸல்லைத்த அலா இப்ராஹீம வஅலா ஆலி இப்ராஹீம இன்னக்க ஹமீதும் மஜீத். அல்லாஹும்ம பாரிக் அலா முஹம்மதிவ் வஅலா ஆலி முஹம்மதின் கமா பாரக்த அலா இப்ராஹீம வஅலா ஆலி இப்ராஹீம இன்னக்க ஹமீதும் மஜீத்.

## 13. நாள் முழுவதும் நன்மை தரும் ஸலவாத்

اَللّٰهُمَّ صَلِّ عَلَى سَيِّدِنَا مُحَمَّدٍ فِيْ اَوَّلِ كَلَامِنَا اَللّٰهُمَّ صَلِّ عَلَى سَيِّدِنَا مُحَمَّدٍ فِيْ اَوْسَطِ كَلَامِنَا اَللّٰهُمَّ صَلِّ عَلَى سَيِّدِنَا مُحَمَّدٍ فِيْ آخِرِ كَلَامِنَا

அல்லாஹுஃம்ம ஸல்லி அலா சையிதினா முஹம்மதின் ∴பீ அவ்வலி கலாமினா அல்லாஹுஃம்ம ஸல்லி அலா சையிதினா முஹம்மதின் ∴பீ அவ்ஸதி கலாமினா அல்லாஹுஃம்ம ஸல்லி அலா சையிதினா முஹம்மதின் ∴பீ ஆஹிரி கலாமினா.

இந்த ஸலவாத்தை பகலில் மூன்று முறையும் இரவில் மூன்று முறையும் ஓதினால் நாள் முழுவதும் ஸலவாத் ஓதிய நன்மை கிடைக்கப்பெறும்.

## 14. உடல் நோயை நீக்கும் உன்னத ஸலவாத்

اَللّٰهُمَّ صَلِّ عَلَى سَيِّدِنَا مُحَمَّدٍ طِبِّ الْقُلُوْبِ وَدَوَائِهَا وَعَافِيَةِ الْأَبْدَانِ وَشِفَائِهَا وَنُوْرِ الْأَبْصَارِ وَضِيَائِهَا وَقُوْتِ الْأَرْوَاحِ وَغِذَائِهَا وَعَلَى آلِهِ وَصَحْبِهِ وَسَلِّمْ

அல்லாஹுஃம்ம ஸல்லி அலா சையிதினா முஹமமதின் திப்பில் குலூபி வதவாயிஹா வஆ∴பியதில் அப்தானி வஷி∴பாஇஹா வநூரில் அப்ஸாரி வளியாஇஹா வகூத்தில் அர்வாஹி வஙிதாயிஹா வஅலா ஆலிஹி வபாரிக் வஸல்லிம்.

இந்த ஸலவாத்தை தொடர்ந்து ஓதி வருவதால் உடல் வியாதிகள் நீங்கும். கண்ணொளி தெளிவாகும். சோதனைகள், சிரமங்களை விட்டும் பாதுகாப்பு கிடைக்கும்.

## 15. எண்பதாண்டு வணங்கிய நன்மை தரும் ஸலவாத்

வெள்ளிக்கிழமை அன்று அஸர் தொழுகைக்கு பின் பின்வரும் ஸலவாத்தை ஓதினால் எண்பது வருடப் பாவங்கள்

மன்னிக்கப்பட்டு, எண்பது வருடம் வணக்கம் செய்த நன்மை எழுதப்படுகிறது. இது பற்றி நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறிய ஹதீஸ் இதோ...

ஹஜ்ரத் அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்: எவர் ஜும்ஆ நாளின் அஸர் தொழுகைக்குப் பிறகு தனது இடத்தை விட்டும் எழுவதற்கு முன்னால் எண்பது தடவை

اللّٰهُمَّ صَلِّ عَلَى مُحَمَّدِ النَّبِيِّ الْاُمِّيِّ وَعَلَى آلِهِ
وَسَلِّمْ تَسْلِيْمًا

அல்லாஹும்ம ஸல்லி அலா முஹம்மதினின் னபிய்யில்
உம்மிய்யி வஅலா ஆலிஹி வஸல்லிம் தஸ்லீமா

என்று ஓதுகிறாரோ அவரது எண்பது வருட பாவங்கள் மன்னிக்கப்பட்டு, எண்பது வருடங்கள் இபாதத் செய்த நன்மை எழுதப்படும் என்று நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள். **நூல்: தாரகுத்னி**



# அழகிய துஆக்கள்

## 1. துஆக்கள் ஏற்கப்பட ஓதும் துஆ

அன்ஆம் என்ற சூராவின் 124 வது ஆயத்தில் வரும் அல்லாஹ் என்ற இரண்டு வார்த்தைகளுக்கிடையில் துஆக் கேட்டால் துஆ ஏற்கப்படும். இது அனுபவப்பூர்வமான அமலாகும்.

وَإِذَا جَاءَتْهُمْ آيَةٌ قَالُوا لَن نُّؤْمِنَ حَتَّى نُؤْتَى مِثْلَ مَا
أُوتِيَ رُسُلُ اللهِ اَللّٰهُ أَعْلَمُ حَيْثُ يَجْعَلُ رِسَالَتَهُ

வஇதா ஜாஅத்ஹும் ஆயதுன் காலூ லன்னுஃமின ஹத்தா நுஃதா மிஸ்ல மா ஊதிய ருஸுலுல்லாஹ். அல்லாஹு அஃலமு ஹைஸு யஜ்அலு ரிஸாலதஹு

இந்த ஆயத்தை ருஸுலுல்லாஹ் வரை ஓதிவிட்டு துஆ கேட்கவும். துஆவுக்குப் பின் மீதமுள்ள ஆயத்தை ஓதி முடிக்கவும். இன்ஷா அல்லாஹ் நிச்சயம் தேவை நிறைவேறும்.

## 2. பிரச்சனைகள் தீர ஓதும் துஆ

நபி (ஸல்) அவர்கள் பிரச்சனைகள் ஏற்படும் போது இந்த துஆவை ஓதுவார்கள் என்று அனஸ் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

اَللّٰهُمَّ لَاسَهْلَ اِلَّا مَا جَعَلْتَهُ سَهْلًا وَاَنْتَ تَجْعَلُ الْحُزْنَ اِذَا شِئْتَ سَهْلًا

அல்லாஹுஃம்ம லா ஸஹ்ல, இல்லாமா ஜஅல்தஹுஃ ஸஹ்லா வஅன்த தஜ்அலுல் ஹுஃஜ்ன இதா ஷி:.த ஸஹ்லா

### 3. ஏழ்மை நீங்கிட ஓதும் துஆ

ஹஜ்ரத் உமர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

உங்களுக்கு உணவு நெருக்கடி ஏற்பட்டால் நீங்கள் வீட்டை விட்டு வெளியேறும் போது இந்த துஆவை ஓதிக் கொள்ளவும் என நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

بِسْمِ اللهِ عَلَى نَفْسِىْ وَمَالِىْ وَدِيْنِىْ اَللّٰهُمَّ رَضِّنِىْ بِقَضَائِكَ وَبَارِكْ لِىْ فِيْمَا قُدِّرَ لِىْ حَتَّى لَا اُحِبُّ تَعْجِيْلَ مَا اَخَّرْتَ وَلَا تَأْخِيْرَ مَا عَجَّلْتَ

பிஸ்மில்லாஹி அலா ந:.ப்ஸீ வமாலீ வதீனீ. அல்லாஹுஃம்ம ரழ்ழினி பிகழாஇக வபாரிக்லீ :.பீமா குத்திரலீ ஹத்தா லா உஹிப்பு த:.ஜீல மா அஹ்ஹர்த வலா த:.ஹீர மா அஜ்ஜல்த.

**நூல் - பிக்ரே மோத்தி**

### 4. உடல் வலி நீங்கிட ஓதும் துஆ

اَعُوْذُ بِعِزَّةِ اللهِ وَقُدْرَتِهِ مِنْ شَرِّ مَا اَجِدُ وَاُحَاذِرُ

அஊது பிஇஜ்ஜதில்லாஹி வகுத்ரததிஹி மின்ஷர்ரி மாஅஜிது வஉஹாதிர்

உடலில் எந்த இடத்தில் வலி ஏற்பட்டாலும் அந்த இடத்தில் வலது கையை வைத்து பிஸ்மில்லாஹிர் ரஹ்மானிர் ரஹீம் என்று மூன்று முறை கூறிய பின் ஏழு தடவை மேற்கூறப்பட்ட துஆவை ஓதவேண்டும். **நூல்: முஸ்லிம்**

## 5. பகைவர்களின் பயம் நீங்கிட ஓதும் துஆ

பகைவர்கள், எதிரிகள் மூலம் தீங்கோ, பாதிப்போ ஏற்படலாம் என்ற அச்சமிருந்தால் அல்லது தலைவர்கள், அதிகாரிகள் மூலம் நமக்கு ஏதாவது காரியங்கள் ஆகவேண்டியிருந்தால் அவர்களை சந்திக்கும் முன் கீழ்க்கண்ட துஆவை ஓதிக்கொள்ளவும்.

اَللّٰهُمَّ اِنَّا نَجْعَلُكَ فِىْ نُحُوْرِهِمْ وَنَعُوْذُ بِكَ مِنْ شُرُوْرِهِمْ

அல்லாஹும்ம இன்னா நஜ்அலுக ஃபீ நுஹூரிஹிம்
வநஊதுபிக மின் ஷுரூரிஹிம்

**நூல்: நஸயீ**

## 6. கடன் நீங்க ஓதும் துஆ

اَللّٰهُمَّ اكْفِنِىْ بِحَلَالِكَ عَنْ حَرَامِكَ وَاَغْنِنِىْ
بِفَضْلِكَ عَمَّنْ سِوَاكَ

அல்லாஹும்மக்ஃபினி பிஹலாலிக அன்ஹராமிக வஅங்னினீ
வபிபள்லிக அம்மன் ஸிவாக்.

**நூல்: திர்மிதி**

இந்த துஆவை அதிகமாக ஓதிவந்தால் உஹத் மலையளவுக்கு கடன் இருந்தாலும் அல்லாஹ் அதை

விரைவில் நிறைவேற்றி வைப்பான் என்று ஹதீஸில் வந்துள்ளது.

## 7. வறுமை நீங்கி வளம் பெருகிட ஓதும் துஆ

سُبْحَانَ اللهِ وَبِحَمْدِهِ سُبْحَانَ اللهِ الْعَظِيمِ
اَسْتَغْفِرُ اللهِ

*சுப்ஹானல்லாஹி வபிஹம்திஹி சுப்ஹானல்லாஹில் அளீம் அஸ்த∴க்∴பிருல்லாஹ்.*

தினமும் பஜ்ருடைய முன்சுன்னத்திற்கும் பர்ளுக்கும் இடையில் 100 முறை இந்த துஆவை ஓதினால் இன்ஷா அல்லாஹ் விரைவில் வறுமை நீங்கி செல்வம் பெருகிவிடும். **நூல் முஅத்தா மாலிக்**

## 8. எழுபது வியாதிகள் குணமாக ஓதும் துஆ

بِسْمِ اللهِ الرَّحْمَانِ الرَّحِيمِ لَا حَوْلَ وَلَا قُوَّةَ اِلَّا
بِاللهِ الْعَلِيِّ الْعَظِيمِ

*பிஸ்மில்லாஹிர் ரஹ்மானிர் ரஹீம். லாஹவ்ல வலாகுவ்வத்த இல்லா பில்லாஹில் அலிய்யில் அளீம்*

என்று தினமும் பத்து முறை சொல்லி வந்தால் பாவங்களெல்லாம் மன்னிக்கப்படுவதுடன் காலரா, பைத்தியம், குஷ்டம் போன்ற 70 வியாதிகள் குணமாகிவிடும். மேலும் ஜின், ஷைத்தான்களுடைய தீங்குகளும் ஏற்படாது என்று நபி (ஸல்) கூறினார்கள். **நூல் தப்ரானி**

## 9. குழந்தைப் பேறு கிடைக்க ஓதும் துஆ

رَبِّ هَبْ لِىْ مِنْ لَّدُنْكَ ذُرِّيَّةً طَيِّبَةً اِنَّكَ سَمِيْعُ الدُّعَاء

ரப்பி ஹப்லி மில்லதுன்க துர்ரிய்யதன் தய்யிபதன் இன்னக ஸமீஉத்துஆ

இது நபி ஜகரிய்யா (அலை) அவர்கள் குழந்தை வேண்டி கேட்ட துஆவாகும். குழந்தைப் பேறு வேண்டுபவர்கள் இஷா தொழுகைக்குப் பின் 100 முறை ஓதி வருவது சிறந்தது.

## 10. கண் திருஷ்டி நீங்க ஓதும் துஆ

اُعِيْذُكُمَا بِكَلِمَاتِ اللهِ التَّامَّةِ مِنْ كُلِّ شَيْطَانٍ وَّهَامَّةٍ وَمِنْ كُلِّ عَيْنٍ لاَمَّةٍ

உஃதுகுமா பிகலிமாதில்லாஹித் தாம்மத்தி மின்குல்லி ஷைத்தானிவ் வஹாம்மதின் வமின்குல்லி அய்னின் லாம்மதின்

குழந்தைகளின் மீது இந்த துஆவை ஓதி ஊதினால் கண்திருஷ்டி ஏற்படுவதிலிருந்து பாதுகாக்கப்படுவர்.

நூல்: புஹாரி

## 11. நோயாளியை விசாரிக்கச் சென்றால் ஓதும் துஆ

اَسْاَلُ اللهَ الْعَظِيْمَ رَبَّ الْعَرْشِ الْعَظِيْمِ اَنْ يَّشْفِيَكَ وَيُعَافِيَكَ

அஸ்அலுல்லாஹல் அளீம ரப்பல் அர்ஷில் அளீமி அய்யஷ்ஃபியக வயுஆஃபியக.

நோயாளியை சந்தித்து ஏழு தடவை இந்த துஆவை ஓதி ஊதினால் அவருக்கு மரண நேரம் வராதவரை இந்த துஆவின் மூலம் அல்லாஹ் அவருக்கு ஷிஃபாவைக் கொடுப்பான். **நூல்: அபூதாவூத்**

## 12. கப்ரஸ்தானுக்குச் சென்றால் ஓதும் துஆ

اَلسَّلَامُ عَلَيْكُمْ اَهْلَ الدِّيَارِ مِنَ الْمُؤْمِنِيْنَ وَالْمُسْلِمِيْنَ وَاِنَّا اِنْ شَاءَ اللّٰهُ بِكُمْ لَاحِقُوْنَ نَسْاَلُ اللّٰهَ لَنَا وَلَكُمُ الْعَافِيَةَ

அஸ்ஸலாமு அலைக்கும் அஹ்லத்தியாரி மினல் முஃமினீன வல்முஸ்லிமீன வஇன்னா இன்ஷா அல்லாஹுு பிகும் லாஹிகூன். நஸ்அலுல்லாஹ லனா வலகுமுல் ஆஃபியா **நூல்: முஸ்லிம்**

## 13. மனக்கசப்பு மற்றும் தீய செயல்களை விட்டும் பாதுகாப்புப் பெற ஓத வேண்டிய துஆ

اَللّٰهُمَّ اِنِّىْ اَسْاَلُكَ مِنَ الشِّرْكِ وَالنِّفَاقِ وَسُوْءِ الْاَخْلَاقِ

அல்லாஹும்ம இன்னீ அஊதுபிக மினஷ்ஷிகாகி வன்னிஃபாகி வஸூஇல் அஹ்லாக்

**நூல்: நஸயீ**

## 14. காலை நேரத்தில் ஓதும் துஆ

اَللّٰهُمَّ بِكَ اَصْبَحْنَا وَبِكَ اَمْسَيْنَا وَبِكَ نَحْيٰى وَبِكَ نَمُوْتُ وَاِلَيْكَ الْمَصِيْرُ

அல்லாஹும்ம பிக அஸ்பஹ்னா வபிக அம்ஸைனா வபிக நஹ்யா வபிக நமூத்து வஇலைக்கல் மஸீர்

நூல்: திர்மிதி

## 15. மாலை நேரத்தில் ஓதும் துஆ

اَللّٰهُمَّ بِكَ اَمْسَيْنَا وَبِكَ اَصْبَحْنَا وَبِكَ نَحْيٰى وَبِكَ نَمُوْتُ وَاِلَيْكَ النُّشُوْرُ

அல்லாஹும்ம பிக அம்ஸைனா வபிக அஸ்பஹ்னா வபிக நஹ்யா வபிக நமூத்து வஇலைக்கன்னுஷூர்

நூல்: திர்மிதி

## 16. புதிய பிறையைப் பார்க்கும் போது ஓதும் துஆ

اَللهُ اَكْبَرُ اَللّٰهُمَّ أَهِلَّهُ عَلَيْنَا بِالْيُمْنِ وَالإِيْمَانِ وَالسَّلَامَةِ وَالإِسْلَامِ وَالتَّوْفِيْقِ لِمَا تُحِبُّ وَتَرْضٰى رَبِّى وَرَبُّكَ اللّٰهُ

அல்லாஹு அக்பர் அல்லாஹும்ம அஹில்லஹூ அலைனா பில் அம்னி வல்ஈமானி வஸ்ஸலாமதி வல்இஸ்லாமி வத்தெள:.பீகி லிமா துஹிப்பு வதர்ளா ரப்பீ வரப்புகல்லாஹ்

நூல்: திர்மிதி

## 17. நோன்பு திறந்த பின் ஓதும் துஆ

ذَهَبَ الظَّمَاُ وَابْتَلَّتِ الْعُرُوْقُ وَثَبَتَ الْاَجْرُ اِنْ شَاءَ اللهُ

தஹபள்ளமஉ வப்தல்லதில் உருகு வஸபதல் அஜ்ரு இன்ஷா அல்லாஹ்

நூல்: அபூதாவூத்

## 18. லைலதுல் கத்ரு இரவில் ஓதும் துஆ

اَللّٰهُمَّ اِنَّكَ عَفُوٌّ تُحِبُّ الْعَفْوَ فَاعْفُ عَنِّىْ

அல்லாஹும்ம இன்னக அஃப்வுன் துஹிப்புல்
அஃப்வ ஃபஃபு அன்னீ

நூல்: இப்னுமாஷா

## 19. மணமக்களை வாழ்த்தி ஓதும் துஆ

بَارَكَ اللهُ لَكَ وَبَارَكَ عَلَيْكَ وَجَمَعَ بَيْنَكُمَا فِىْ خَيْرٍ

பாரகல்லாஹு லக வபாரக அலைக்க வஜமஅ
பைனகுமா ஃபீஹைர்

நூல்: திர்மிதி

## 20. வீட்டினுள் நுழையும் போது ஓதும் துஆ

بِسْمِ اللهِ وَلَجْنَا وَبِسْمِ اللهِ خَرَجْنَا
وَعَلَى اللهِ رَبِّنَا تَوَكَّلْنَا

பிஸ்மில்லாஹி வலஜ்னா வபிஸ்மில்லாஹி ஹரஜ்னா
வஅலல்லாஹி ரப்பினா தவக்கல்னா

## 21. வீட்டிலிருந்து வெளியேறும்போது ஓதும் துஆ

بِسْمِ اللهِ تَوَكَّلْتُ عَلَى اللهِ لَا حَوْلَ وَلَا قُوَّةَ اِلَّا بِاللهِ

பிஸ்மில்லாஹி தவக்கல்து அலல்லாஹி லாஹவ்ல
வலாகுவ்வத்த இல்லா பில்லாஹ்

நூல்: நஸயீ

## 22. மழை வேண்டி ஓதும் துஆ

اَللّٰهُمَّ اسْقِ عِبَادَكَ وَبَهِيْمَتَكَ وَانْشُرْ رَحْمَتَكَ
وَاَحْيِ بَلَدَكَ الْمَيِّتَ

அல்லாஹும்மஸ்கி இபாதக வபஹீமதக வன்ஷுர் ரஹ்மதக வஅஹ்யி பலதகல் மய்யித்த

நூல்: அபூதாவூத்

## 23. மழை பெய்யும்போது ஓதும் துஆ

اَللّٰهُمَّ صَيِّبًا نَافِعًا

அல்லாஹும்ம ஸய்யிபன் நா∴பிஆ

நூல்: புஹாரி

## 24. பள்ளிக்குள் நுழையும்போது ஓதும் துஆ

اَللّٰهُمَّ افْتَحْ لِيْ اَبْوَابَ رَحْمَتِكَ

அல்லாஹும்ம∴ப்தஹ்லீ அப்வாப ரஹ்மதிக்க

நூல்: முஸ்லிம்

## 25. பள்ளியை விட்டு வெளியேறும்போது ஓதும் துஆ

اَللّٰهُمَّ اِنِّيْ اَسْاَلُكَ مِنْ فَضْلِكَ الْعَظِيْمِ

அல்லாஹும்ம இன்னீ அஸ்அலுக மின் ∴பள்லிகல் அளீம்

நூல்: முஸ்லிம்

## 26. மனைவியுடன் சேரும் போது ஓதவேண்டிய துஆ

بِسْمِ اللّٰهِ اَللّٰهُمَّ جَنِّبْنَا الشَّيْطَانَ
وَجَنِّبِ الشَّيْطَانَ مَا رَزَقْتَنَا

பிஸ்மில்லாஹி அல்லாஹும்ம ஜன்னிப்னஷ் ஷைத்தான
வஜன்னிபிஷ் ஷைத்தான மாரஜக்தனா

நூல்: புஹாரி

## 27. உணவுக்கு முன் ஓதும் துஆ

بِسْمِ اللّٰهِ وَعَلٰى بَرَكَةِ اللّٰهِ

பிஸ்மில்லாஹி வஅலா பரகதில்லாஹ்

## 28. ஆரம்பத்தில் பிஸ்மில்லாஹ் கூற மறந்துவிட்டால்

بِسْمِ اللّٰهِ فِيْ اَوَّلِهِ وَآخِرِهِ

பிஸ்மில்லாஹி ஃபீ அவ்வலிஹி வஆஹிரிஹி

நூல் திர்மிதி

## 29. உணவுண்டு முடித்த பின் ஓதும் துஆ

اَلْحَمْدُ لِلّٰهِ الَّذِىْ اَطْعَمَنِىْ هٰذَا وَرَزَقَنِيْهِ مِنْ
غَيْرِ حَوْلٍ مِّنِّىْ وَلَا قُوَّةٍ

அல்ஹம்துலில்லாஹில்லதீ அத்அமனீ ஹாதா வரஜகனீஹி
மின் ஙைரி ஹவ்லிம் மின்னீ வலாகுவ்வா

اَللّٰهُمَّ بَارِكْ لَنَا فِيْهِ وَاَبْدِ لَنَا خَيْرًا مِّنْهُ

அல்லாஹு ம்ம பாரிக்லனா ஃபீஹி அப்திலனா ஹைரம் மின்ஹு

**நூல்: அஹ்மத்**

## 30. ஆடை அணியும்போது ஓதும் துஆ

اَلْحَمْدُ لِلّٰهِ الَّذِىْ كَسَانِىْ هٰذَا وَرَزَقَنِيْهِ مِنْ غَيْرِ حَوْلٍ مِّنِّىْ وَلَا قُوَّةٍ

அல்ஹம்துலில்லாஹில்லதீ கஸானி ஹாதா வரஜகனீஹி மின் ஙைரி ஹவ்லிம் மின்னி வலா குவ்வா

**நூல் அபூதாவூத்**

## 31. தூங்க ஆரம்பிக்கும்போது ஓதும் துஆ

اَللّٰهُمَّ بِاسْمِكَ اَمُوْتُ وَاَحْيٰى

அல்லாஹு ம்ம பிஸ்மிக அமூத்து வஅஹ்யா

## 32. தூங்கி எழுந்த பின் ஓதும் துஆ

اَلْحَمْدُ لِلّٰهِ الَّذِىْ اَحْيَانَا بَعْدَ مَا اَمَاتَنَا وَاِلَيْهِ النُّشُوْرُ

அல்ஹம்துலில்லாஹில்லதீ அஹ்யானா பஃதமா அமாதனா வஇலைஹின்னுஷூர்

## 33. கழிவறைக்குள் நுழையும் போது ஓதும் துஆ

اَللّٰهُمَّ اِنِّىْ اَعُوْذُبِكَ مِنَ الْخُبُثِ وَالْخَبَائِثِ

அல்லாஹும்ம இன்னீ அஊதுபிக மினல் குபுஸி வல்கபாயிஸி.

## 34. கழிவறையிலிருந்து வெளியேறிய பின் ஓதும் துஆ

غُفْرَانَكَ اَلْحَمْدُ لِلّٰهِ الَّذِىْ اَذْهَبَ عَنِّىْ الْاَذٰى وَعَافَانِىْ

கு:ப்ரானக அல்ஹம்துலில்லாஹில்லதீ
அத்ஹப அன்னில் அதா வஆ:பானீ

நூல்: இப்னுமாஷா

## 35. உளூச் செய்த பின் ஓதும் துஆ

اَللّٰهُمَّ اجْعَلْنِىْ مِنَ التَّوَّابِيْنَ وَاجْعَلْنِىْ مِنَ الْمُتَطَهِّرِيْنَ وَاجْعَلْنِىْ مِنْ عِبَادِكَ الصَّالِحِيْنَ

அல்லாஹும்மஜ்அல்னீ மினத்தவ்வாபீன வஜ்அல்னீ மினல் முததஹ்ஹிரீன வஜ்அல்னீ மின் இபாதிகஸ் ஸாலிஹீன்

நூல்: திர்மிதி



# அன்றாட சுன்னத்துகள்

## 1. பள்ளிவாசலுக்குள் நுழைவதின் சுன்னத்துகள்

1. முதலில் இடது கால் (செருப்பு) காலணியையும் பிறகு வலது கால் காலணியையும் கழற்றி வைக்க வேண்டும். வலது காலை முன் வைத்து பள்ளிவாசலுக்குள் நுழைய வேண்டும். பிஸ்மில்லாஹி வஸ்ஸலாத்து வஸ்ஸலாமு அலா ரசூலில்லாஹ் என்று ஓதி நுழைய வேண்டும்.

2. பள்ளிவாசலுக்குள் நுழையும்போது அல்லாஹும்மஃஃப்தஹ்லீ அப்வாப ரஹ்மதிக என்ற துஆவை ஓத வேண்டும்.

3. பள்ளிவாசலுக்குள் நுழைந்ததும் நவய்த்து சுன்னத்தல் இஃஃதிகாஃஃபி மாதும்து ஃஃபீஹாதல் மஸ்ஜிதி லில்லாஹி தஆலா என்று ஓதி இஃஃதிகாஃஃப் நிய்யத் செய்து கொள்ள வேண்டும்.

## 2. பள்ளிவாசலிலிருந்து வெளியேறுவதின் சுன்னத்துகள்

1. முதலில் இடது காலை வெளியே வைத்து வர வேண்டும், பிஸ்மில்லாஹி வஸ்ஸலாத்து வஸ்ஸலாமு அலா ரசூலில்லாஹ் என்றுஓதிக் கொண்டு வெளியே வர வேண்டும்.

2. பள்ளிவாசலை விட்டு வெளியேறும் போது அல்லாஹும்ம இன்னீ அஸ்அலுக்க மின் ஃபழ்லிக்க வரஹ்மதிக்க என்ற துஆவை ஓத வேண்டும்.

3. முதலில் வலது காலிலும் பிறகு இடது காலிலும் காலணி அணிய வேண்டும்.

4. பள்ளிவாசலுக்குள் வந்தவுடன் அங்கு எவரேனும் இருந்தால் சலாம் கூற வேண்டும். எவரும் இல்லையானால் "அஸ்ஸலாமு அலைக்கும் அலா இபாதில்லாஹிஸ் ஸாலிஹீன்" என்று கூற வேண்டும்.

5. பள்ளிவாசலுக்குள் நுழைந்தவுடன் தஹிய்யதுல் மஸ்ஜித் 2 ரக்அத் தொழுவது, குர்ஆன் ஓதுவது, திக்ர், துஆ செய்வது, உபதேசம் செய்வது போன்ற நன்மையான காரியங்களில் ஈடுபட வேண்டும்,

6. வீண் பேச்சு பேசுவது, சண்டையிடுவது, வியாபாரம் செய்வது, காணாமல் போன பொருளைத் தேடுவது, அதைப் பற்றி அறிவிப்பு செய்வது, தூங்குவது, சாப்பிடுவது, செல்போன் பேசுவது போன்ற காரியங்களைச் செய்யக் கூடாது.

7. ஆனால் உள்ளே நுழையும்போது இஃதிகாஃபின் நிய்யத் செய்து கொண்டால் பள்ளியினுள் தேவை ஏற்படும்போது தூங்குவது, சாப்பிடுவது, அவசியமான விஷயங்களைப் பேசுவது ஆகியவை கூடும்.

8. பச்சையானபூண்டு, வெங்காயம் போன்றவைகளை சாப்பிட்டுவிட்டு அந்த வாடையோடு மஸ்ஜிதுக்குள் வரக் கூடாது,

## 3. குர்ஆன் ஓதுவதின் சுன்னத்துகள்

1. உளூவுடன் கிப்லா திசை நோக்கி கண்ணியமாக அமர வேண்டும்.

2. குர்ஆனை ரேஹால், பெஞ்ச் அல்லது தலையணை போன்ற உயரமான இடத்தில் வைக்க வேண்டும்.

3. அவசரமாக ஓதாமல் நிறுத்தி மெதுவாக தஜ்வீத் முறைப்படி ஓத வேண்டும்.

4. தேவை ஏதும் ஏற்பட்டால் குர்ஆனை மூடிவிட்டு தேவையை நிறைவேற்ற வேண்டும். தேவை நிறைவேறிய பின் மீண்டும் குர்ஆனை ஓத நாடினால் ஆரம்பத்தில் மீண்டும் 'தஅவ்வுத்' (அஊது பில்லாஹி மினஷ் ஷைத்தானிர்ரஜீம்) ஓதி தொடர வேண்டும்.

5. மக்கள் வேலையில் ஈடுபட்டிருந்தால் குர்ஆனை மெதுவாக ஓத வேண்டும்.

6. குர்ஆனின் பொருள் உணர்ந்து ரசனையோடு இனிய குரலில் ஓத வேண்டும்.

7. குர்ஆன் மிக உயர்வான வேதம், ஆதலால் அதன் மேன்மையை உள்ளத்தில் பதிய வைத்து ஓத வேண்டும்.

## 4. தஃலீம், பயான் மஜ்லிஸ்களில் அமர்வதின் சுன்னத்துகள்

1. கவனமாகவும் ஒழுக்கத்துடனும் கேட்க வேண்டும். கேட்டவற்றை மனதில் பதிய வைக்க வேண்டும்.

2. கற்ற அறிவின்படி செயலாற்றும் நோக்கத்துடன் கேட்க வேண்டும்.

3. நம்மிடம் அமல் உண்டாகுவதற்காகவும், கேட்டவற்றை மற்றவர்களுக்கு எத்திவைக்கும் நோக்கத்துடனும் கேட்க வேண்டும்.

4. கேட்கக்கூடிய நல்ல விஷயங்கள் நம்மிடமிருந்தால் அல்லாஹ் விற்கு நன்றி செலுத்த வேண்டும். நம்மிடம் அந்த நல்ல விஷயங்கள் இல்லாவிட்டால் இனிமேல் செயலாற்றுவதற்கு உறுதி கொள்ள வேண்டும்.

5. கேட்டவற்றை தனிமையில் அமர்ந்து சிந்தித்து ஆராய்ச்சி செய்ய வேண்டும்.

6. கேட்கக் கூடிய விஷயங்களில் ஏதேனும் சந்தேகமேற்பட்டால் நம்பிக்கையான ஆலிம்களிடத்தில் கேட்டு விளங்கிக்கொள்ள வேண்டும்.

7. பொழுதை போக்கும் நோக்கத்துடன் கேட்கக் கூடாது.

8. மற்றவர்களின் குறைகளை கண்டுபிடிக்கும் நோக்கத்துடனும் கேட்கக் கூடாது.

9. நெருங்கி நெருங்கி அமர வேண்டும். மேலும் ஒருவருக் கொருவர் இடையில் பேசிக்கொள்ளக் கூடாது. உளூவுடன் இருப்பது சிறந்தது. சொல்லக்கூடிய விஷயங்களை எத்தனை தடவை கேட்டிருந்தாலும், புதிதாக கேட்பதைப் போன்ற ஆர்வத்துடனும், ஆசையுடனும் கேட்க வேண்டும்.

10. கேட்டவை நம்முடைய அமலில் வருவதற்காக அல்லாஹ்விடம் துஆச் செய்ய வேண்டும்.

## 5. தண்ணீர் அருந்துவதின் சுன்னத்துகள்

1. வலது கையால் தண்ணீர் அருந்த வேண்டும்.

2. உட்கார்ந்து அருந்த வேண்டும்.

3. தண்ணீரைப் பார்த்து அருந்த வேண்டும்.

4. பிஸ்மில்லாஹிர்ரஹ்மானிர்ரஹீம் என்று சொல்லி அருந்த வேண்டும்.

5. மூன்று முறை சுவாசித்து (மூச்சுவிட்டு) அருந்த வேண்டும்.

6. மிருகங்கள் போல் ஒரே மூச்சில் அருந்தக் கூடாது.

7. பாத்திரத்தில் மூச்சு விடக் கூடாது.

8. தங்கம் வெள்ளி பாத்திரத்தில் அருந்தக் கூடாது.

9. சூடானவைகளை ஊதி சாப்பிடக் கூடாது.

10. தண்ணீர் அருந்திய பின் அல்ஹம்துலில்லாஹ் என்றும் வஷ்ஷுக்ரு லில்லாஹ் என்றும் கூற வேண்டும்.

11. பால் அருந்திய பின் அல்ஹம்து லில்லாஹ் கூறிய பின் அல்லாஹும்ம பாரிக் லனா ஃபீஹி வஜித்னா மின்ஹு என்ற துஆவை ஓத வேண்டும்.

12. புனித ஜம் ஜம் நீரையும், உளுச் செய்தபின் மீதி தண்ணீரையும் நின்று கொண்டு குடிப்பது நல்லது.

## 6. உணவருந்துவதின் சுன்னத்துகள்

1. விரிப்பு விரித்துக் கொள்ள வேண்டும்.

2. இரண்டு கைகளையும் மணிக்கட்டு வரை கழுவ வேண்டும்,

3. வாய் கொப்பளித்துக் கொள்ள வேண்டும்.

4. சுன்னத்தான முறையில் உட்கார வேண்டும். ஒரு காலை மடக்கி வைத்து மற்றொரு காலை குத்த வைத்து உட்காருதல் அல்லது அத்தஹிய்யாத்து முறையில் உட்காருவது)

5. தரையில் அமர்ந்து சாப்பிட வேண்டும்.

6. சாப்பிடுவதற்கு முன் பிஸ்மில்லாஹி வஅலா பரக்கத்தில்லாஹ் என்று கூற வேண்டும்.

7. வலது கையால் சாப்பிட வேண்டும்.

8. தன் பக்கத்திலிருக்கும் உணவிலிருந்து சாப்பிட வேண்டும்.

9. உணவின் நடுவில் சாப்பிடக் கூடாது.

10. முடிந்த வரை மூன்று விரல்களால் சாப்பிட வேண்டும்.

11. உணவு கீழே விழுந்தால் அதை எடுத்து சுத்தப்படுத்தி சாப்பிட வேண்டும்.

12. நின்று கொண்டும், சாய்ந்து கொண்டும், படுத்துக் கொண்டும் சாப்பிடக் கூடாது.

13. உணவை முகர்ந்து பார்க்கக் கூடாது.

14. ஆரம்பத்தில் பிஸ்மில்லாஹ் சொல்லவில்லை என்றால் இடையில் பிஸ்மில்லாஹி அவ்வலஹு வஆஹிரஹு என்று சொல்ல வேண்டும்.

15. சேர்ந்து சாப்பிட வேண்டும். ஒரு பாத்திரத்தில் பலர் சேர்ந்து சாப்பிடுவது சிறப்பும் பரகத்தும் ஆகும்.

16. வீண் பேச்சுக்கள் பேசாமல் சாப்பிட வேண்டும்.

17. உணவை குறை கூறக் கூடாது. பிடித்தால் சாப்பிட வேண்டும் அல்லது அமைதியாக இருந்து விட வேண்டும். தட்டை வழித்தும் கைவிரல்களை சூப்பியும் சாப்பிட வேண்டும்.

18. மிகவும் சூடாக சாப்பிடக் கூடாது, சாப்பிட்ட பிறகு அல்ஹம்துலில்லாஹில்லதீ அத்அமனா வ ஸகானா வஜஅலனா மினல் முஸ்லிமீன் என்று கூற வேண்டும்.

19. சாப்பிட்ட பிறகு கை கழுவி வாய் கொப்பளித்து கொள்ள வேண்டும்.

20. சேர்ந்து சாப்பிடும்போது எல்லோரும் ஒன்றாக எழுந்திருக்க வேண்டும். முன்னதாக எழுந்திருக்க நேர்ந்தால் மற்றவரிடம் அனுமதி பெற்று எழுந்திருக்க வேண்டும்.

21. சாப்பிடும் முன் இந்த உணவை அல்லாஹ் தான் அளித்தான்; எனவே இந்த உணவின் மூலம் கிடைக்கும் சக்தியை அல்லாஹ்வின் வழியிலே செலவு செய்வேன் என்று நிய்யத் வைக்க வேண்டும். உணவருந்தும் முன்பும் உணவருந்திய பின்பும் சிறிது உப்பை சுவைப்பது சிறப்பானது.

22. சாப்பிடும்போது தண்ணீர் பருக நேர்ந்தால் இடது கையில் தாங்கி வலது கையினால் தண்ணீரைப் பருக வேண்டும்.

## 7. சபையில் பேணவேண்டிய சுன்னத்துகள்

1. மக்கள் சபைகளில் அமர்ந்திருக்கும்போது ஒருவர் இடையில் வந்தால் ஓரத்தில் அமர வேண்டும்.

2. மனிதர்களின் பிடரிகளை தாண்டிக் கொண்டு செல்லக் கூடாது,

3. மக்களைப் பிரித்துக் கொண்டு இடையில் அமரக் கூடது.

4. உட்காந்திருக்கும் ஒருவரை எழுப்பிவிட்டு அந்த இடத்தில் உட்காரக்கூடாது.

5. முக்கியஸ்தர்களை, ஆலிம்களை, சான்றோர்களை சபைகளில் கண்ணியப்படுத்தி உட்கார வைக்க வேண்டும். உரிய மரியாதை தர வேண்டும்.

6. ஒருவருக்கு கண்ணியம் அளிக்கும்போது மற்றொருவருக்கு இழிவு ஏற்படுத்திவிடக்கூடாது.

7. சபைகளில் அடுத்தவர்களின் குறைகளைப் பற்றிப் பேசக் கூடாது.

8. ஒருவர் பேசி முடித்தவுடன் அடுத்தவர் பேசவேண்டும். குறுக்கிட்டோ, குத்திக்காட்டியோ பேசக் கூடாது.

9. சபையில் வயதில் மூத்தவருக்கு முன்னுரிமை கொடுக்க வேண்டும்.

10. நாம் வரும்போது சபையில் உள்ளவர்கள் எழுந்து நின்று மரியாதை செய்ய வேண்டும் என எதிர்பார்க்கக் கூடாது.

11. சபை முடியும் போது "சுப்ஹானக்கல்லாஹும்ம வபிஹம்திக்க வ அஷ்ஹது அல் லா இலாஹ இல்லா அன்த்த அஸ்தங்ஃபிருக்க வ அதூபு இலைக்க" என்ற துஆவை ஓத வேண்டும்.

12. யாருடைய மனமும் புண்படும்படி நடக்கவோ, பேசவோ கூடாது.

13. சபையில் அமரும்போது மற்றவர்களுக்கு இடம் அளித்து கண்ணியப்படுத்த வேண்டும்.

## 8. வீட்டுக்குள் நுழைவதின் சுன்னத்துகள்

1. திக்ரு செய்த வண்ணம் நுழைய வேண்டும்.

2. அல்லாஹும்ம இன்னீ அஸ்அலுக்க ஹைரல் மவ்லஜி வ ஹைரல் மஹ்ரஜி பிஸ்மில்லாஹி வலஜ்னா பிஸ்மில்லாஹி ஹரஜ்னா அலல்லாஹி ரப்பனா தவக்கல்னா இந்த துஆவை வீட்டினுள் நுழையும்போது ஓத வேண்டும்.

3. கதவை தட்டி வீட்டில் இருப்பவர்களுக்கு தனது வருகையை தெரிவித்துக் கொண்டு செல்ல வேண்டும்.

4. வீட்டில் உள்ளவர்களுக்கு அஸ்ஸலாமு அலைக்கும் வரஹ்மத்துல்லாஹி வபரக்காதுஹு என்று ஸலாம் கூறி நுழைய வேண்டும்.

5. வீட்டார்களுக்கு ஸலாம் கூறி வெளியில் செல்ல வேண்டும்.

6. வீட்டிற்குள் நுழைந்த பின் ஸலவாத் ஓதுவதும், குல்ஹுவல்லாஹு அஹத் சூரா ஓதுவதும் வீட்டில் பரகத் உண்டாக்கும் வழி முறையாகும்.

7. பிறர் வீட்டிற்குள் செல்லும்போது அனுமதி பெற்று ஸலாம் கூறி செல்ல வேண்டும்.

8. அனுமதி கிடைக்காவிட்டால் திரும்பி வந்து விட வேண்டும்.

9. வீட்டில் யாரும் இல்லாவிட்டால் அஸ்ஸலாமு அலைனா வ அலா இபாதில்லாஹிஸ் ஸாலிஹீன் என்று கூறி நுழைய வேண்டும்.

10. வீட்டிலிருந்து வெளியே செல்லும்போது பிஸ்மில்லாஹி தவக்கல்த்து அலல்லாஹி லாஹவ்ல வலா குவ்வத்த இல்லாபில்லாஹ் என்று கூறிச் செல்ல வேண்டும்.

## 9. விருந்தின் சுன்னத்துகள்

1. விருந்தளிப்பது நபிமார்களின் சுன்னத்தான நடைமுறையாகும்,

2. வந்த விருந்தினரை வரவேற்று உபசரிப்பதும் அதற்காக அல்லாஹ்வைப் புகழ்வதும் அவசியமாகும்.

3. விருந்தாளியின் மனதை திருப்திப்படுத்தும் வகையில் விருந்தளிக்க வேண்டும்.

4. மூன்று நாட்கள் வரை விருந்தளிப்பது சுன்னத்தாகும்.

5. மூன்று நாட்களுக்கு மேல் கொடுப்பதும் நன்மையாகும்.

6. விருந்தாளி அதிக நாட்கள் தங்கி விருந்தளிப்பவருக்கு தொல்லை தரக்கூடாது.

7. விருந்தினர் உணவருந்தி முடிப்பதற்கு முன் விருந்தளிப்பவர் விருந்தை முடித்துவிடக் கூடாது.

8. விருந்தினரை வழியனுப்புவதற்காக வீட்டுக்காரர் தன் வீட்டு வாசல் வரை செல்வது சுன்னத்தாகும்.

9. விருந்துண்ட பின் சாதாரணமாக உணவருந்திய பின் ஓதும் துஆவுக்கு பிறகு “அல்லாஹும்ம பாரிக் லஹூம்

ஃபீமா ரஜக்தஹூம் வங்ஃபிர் லஹூம் வர்ஹம்ஹூம்” என்று கூற வேண்டும்.

10. விருந்துண்ணக் கூடியவர்கள், விருந்தளிப்பவர் குறிப்பிட்டழைத்த நேரத்தில் சென்றுவிட வேண்டும்.

11. விருந்தருந்தும் வீட்டிற்கு செல்லும் பொழுது உள்ளே வரும்படி அனுமதி கிடைத்த பிறகு அங்குள்ளவர்களுக்கு ஸலாம் கூறிக் கொண்டு உள்ளே நுழைய வேண்டும்.

12. வீட்டினுள் சென்றமர்ந்ததும் அங்குமிங்கும் நோட்டமிடக் கூடாது.

13. உணவருந்தக் கூடியவர்கள் உணவளிப்பவரிடம் தண்ணீரையும், உப்பையும் தவிர வேறெதையும் கேட்கக் கூடாது.

14. முதன் முதலாக வயதில் முதிர்ந்தவர்களையும், ஆலிம்களையும் அமரச் செய்ய வேண்டும். மேலும் வயது முதிர்ந்தவர்களை முதலில் கை கழுவச் செய்து, அவருக்கு வலது புறமாக உள்ளவர்களைத் தொடர்ந்து அவருக்கு இடது புறமுள்ளவரை கடைசியாகக் கழுவச் செய்ய வேண்டும்.

15. மேலும் உணவு பரிமாறும்போதும், பானங்களைக் குடிக்க செய்யும் போதும் இவ்வாறே செய்ய வேண்டும்.

## 10. ஆடை அணிவதின் சுன்னத்துகள்

1. ஆண்கள் தொப்புளிலிருந்து முழங்கால் வரை மறைப்பது ஃபர்ள் (கட்டாயம்) ஆகும்.

2. பெண்கள் இரு கைகள் மணிக்கட்டு வரையிலும், இரு கால்கள் கணுக்கால் வரையிலும் மற்றும் முகம் ஆகியவற்றைத் தவிர மற்ற அனைத்து உறுப்புகளையும் மறைப்பது பர்ள் ஆகும்.

3. முடிந்தவரை வெள்ளை ஆடைகளை அணிய வேண்டும்.

4. ஆண்கள் குங்கும நிறம், காவி, சிகப்பு, மஞ்சள் நிற ஆடைகளை அணிவது மக்ரூஹ் ஆகும்.

5. நபி (ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்) அவர்கள் வெள்ளை ஆடையை அதிகம் விரும்பி அணிந்து வந்தார்கள்.

6. ஜுப்பா, சட்டை, பனியன், டீ சர்ட் அணியும் போது முதலில் வலது கையையும் பிறகு இடது கையையும் நுழைக்க வேண்டும். இதே போன்று கால் சட்டை பேண்ட், பைஜாமா அணிவதிலும் கடைப்பிடிக்க வேண்டும்.

7. ஆண்கள் கால் சட்டை பேண்ட், பைஜாமா, கைலி) ஆகியவை கரண்டைக்கு மேல் கட்ட வேண்டும். கரண்டைக்கு கீழே அணிவது நரகவாதிகளின் அடையாளமாகும்.

8. புது ஆடை அணியும்போது அல்ஹம்து லில்லாஹில்லதீ கஸானீ மா உவாரி பிஹி அவ்ரத்தி வஅதஜம்மலு பிஹி ஃபீஹயாத்தி என்ற துஆவை கூற வேண்டும்.

9. பெண்களின் பைஜாமா, ஷல்வார் போன்ற கீழாடைகள் கரண்டைக்குக் கீழே இருக்க வேண்டும்.

10. சட்டைக்கை மணிக்கட்டுவரை அணிய வேண்டும்.

11. ஆண்கள் பட்டாடை அணியக் கூடாது.

12. ஆடை அணியும்போது அல்ஹம்துலில்லாஹில்லதீ கஸானீ ஹாதா வரஜகனீஹி மின் ஙைரி ஹவ்லிம் மின்னீ வலா குவ்வத்தின் என்ற துஆவை ஓத வேண்டும்.

13. ஆடைகளை கழற்றும் போது பிஸ்மில்லாஹில்லதீ லாஇலாஹ இல்லாஹுவ என்ற துஆவை ஓத வேண்டும்.

14. கழற்றும்போது சட்டையில் இடது கையையும், கால் சட்டையில் இடது காலையும் வெளியாக்கி, பின்பு வலது கை, வலது கால் என கழற்ற வேண்டும்.

15. பெண்கள் உடல் முழுவதும் மறைக்கும் படியான ஆடைகளை அணிய வேண்டும்.

16. பெண்கள் மெல்லிய துணி, ஆடைகளை அணியக் கூடாது. அவ்வாறு அணியும் பெண்களை நபி (ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்) அவர்கள் எச்சரித்துள்ளார்கள்.

17. பெண்கள் எப்போதும் தலையை மறைத்திருக்க வேண்டும். திறந்து வைக்கக் கூடாது.

## 11. முஸாபஹாவின் சுன்னத்துகள்

1. முஸாபஹா செய்யும்போது அல்லாஹ்வைப் புகழ வேண்டும்.

2. முஸாபஹா செய்யும்போது “யங்ஃபிருல்லாஹு லனா வலகும்” எனக் கூற வேண்டும்.

3. முதலில் ஸலாம் சொல்லி பிறகு முஸாபஹா செய்ய வேண்டும்.

4. முஸாபஹா செய்யும்போது முந்தி செய்ய வேண்டும்.

5. பிறரை வழியனுப்பும் போது முஸாபஹா செய்ய வேண்டும்.

6. கையை விடுவிக்க தான் முந்தக் கூடாது.

7. ஒருகையால் கை குலுக்காமல் இருகைகளால் முஸாபஹா செய்ய வேண்டும்.

## 12. துஆச் செய்வதின் சுன்னத்துகள்

1. இரண்டு கைகளையும் தோள் புஜங்கள் அல்லது நெஞ்சு வரை உயர்த்த வேண்டும்.

2. துஆவுக்கு முன் அல்லாஹ்வைப் புகழ வேண்டும்.

3. துஆவின் ஆரம்பத்தில் 'சுப்ஹான ரப்பியல் அஃலல் வஹ்ஹாப்" என்பதைச் சேர்த்து கொள்ள வேண்டும்.

4. துஆவின் ஆரம்பத்திலும் முடிவிலும் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்) அவர்களின் மீது ஸலவாத்து சொல்ல வேண்டும்.

5. துஆ ஒப்புக்கொள்ளப்படும் என்ற நம்பிக்கையுடனும் மன ஓர்மையுடனும் துஆச் செய்ய வேண்டும்.

6. உள்ளச்சத்தோடும் பணிவோடும் துஆச் செய்ய வேண்டும்.

7. துஆவில் அல்லாஹ்வின் சமுகத்தில் தனது பாவங்களை ஒப்புக் கொள்ள வேண்டும்.

8. உளூவுடன் துஆச் செய்ய வேண்டும்.

9. துஆவின் ஆரம்பத்திலோ அல்லது இடையிலோ அல்லது இறுதியிலோ "ரப்பனா ஆத்தினா ஃபித்துன்யா ஹஸனத்தவ் வஃபில் ஆஹிரத்தி ஹஸனத்தவ் வகினா அதாபன்னார்" என்பதை சேர்த்துக் கொள்ள வேண்டும்.

10. ஒருவர் துஆச் செய்ய மற்றவர்கள் ஆமீன் கூறுவது சிறந்த முறையாகும்.

11. நன்மையான காரியத்தை அல்லாஹ்விடம் கேட்கும்பொழுது கரத்தின் உள்பகுதியை முகத்திற்கு நேராகவும், துன்பத்திலிருந்து பாதுகாப்பு கேட்கும் பொழுது கரத்தின் வெளிப்பகுதியை முகத்திற்கு நேராகவும் வைத்து கொள்ள வேண்டும்.

12. துஆ கேட்டு முடித்தவுடன் இரு கரங்களையும் முகத்தில் தடவிக்கொள்ள வேண்டும்.

## 13. ஸலாம் சொல்வதின் சுன்னத்துகள்

1. அறிமுகமான, அறிமுகமில்லாத அனைத்து முஸ்லிம்களுக்கும் ஸலாம் சொல்ல வேண்டும்.

2. நாமே, முந்தி ஸலாம் சொல்ல வேண்டும்.

3. சபைக்கு வரும்போதும், சபையை விட்டுப் போகும்போதும் ஸலாம் கூற வேண்டும்.

4. வீட்டில் நுழையும் போதும் வெளியே செல்லும்போதும் ஸலாம் கூற வேண்டும்.

5. குழந்தைகளுக்கு ஸலாம் கூற வேண்டும்.

6. சிறியவர்கள், பெரியவர்களுக்கு ஸலாம் கூற வேண்டும்,

7. வாகனத்தில் இருப்பவர் நடந்து செல்பவருக்கு ஸலாம் கூற வேண்டும்.

8. சிறிய கூட்டம், பெரிய கூட்டத்திற்கு ஸலாம் கூற வேண்டும்.

9. தூங்குபவருக்கு மெல்லிய குரலில் ஸலாம் கூற வேண்டும்.

10. “அஸ்ஸலாமு அலைக்கும் வரஹ்மத்துல்லாஹி வபரகாத்துஹு என்று முழுமையாக ஸலாம் கூற வேண்டும்,

11. “வ அலைக்குமுஸ்ஸலாம் வ ரஹ்மத்துல்லாஹி வ பரக்காத் துஹு” என்று முழுமையான பதில் கூற வேண்டும்.

12. யாராவது ஸலாம் அனுப்பினால் அதற்கு பதிலாக “வ அலைக்க வ அலைஹிஸ்ஸலாம்” என்று கூற வேண்டும்.

13. ஒரு முஸ்லிம் சகோதரரை சந்தித்தால் ஸலாம் கூறிய பின் முஸாபஹா செய்ய வேண்டும்.

## 14. எச்சில் துப்புதல், தும்மல், கொட்டாவியின் சுன்னத்துகள்

1. கிப்லாவின் திசையிலும், வலது பக்கமும் எச்சில் துப்பக் கூடாது.

2. மக்கள் புழங்கும் இடத்தில் எச்சில் துப்பக் கூடாது.

3. இரு கால்களுக்கு நடுவில் துப்ப வேண்டும்.

4. இதே போன்று காரல் - மூக்கு சளியையும் கண்ட கண்ட இடத்தில் துப்பக்கூடாது.

5. தும்மியதும் (அல்ஹம்துலில்லாஹ்) என்று கூற வேண்டும்.

6. கேட்பவர் (யர்ஹமுக்கல்லாஹ்) என்று தும்மியவருக்கு துஆ செய்ய வேண்டும்.

7. தும்மியவர் மீண்டும் (யஹ்தீகுமுல்லாஹு வயுஸ்லிஹு பாலக்கும்) என்று கூற வேண்டும்.

8. ஜலதோசத்தின் காரணமாக ஒருவர் அடிக்கடி தும்மினால் ஒவ்வொரு முறையும் (யர்ஹமுக்கல்லாஹ்) என்று சொல்ல வேண்டியதில்லை.

9. முடிந்தவரை கொட்டாவியை கட்டுப்படுத்த வேண்டும்.

10. கொட்டாவி வரும்போது தனது கையை வாய் மீது வைக்க வேண்டும்.

11. கொட்டாவி வரும் போது சப்தத்தை அடக்க வேண்டும்.

12. கொட்டாவி வரும்போது அஊது பில்லாஹி மினஷ் ஷைத்தானிர் ரஜீம் என்று கூற வேண்டும்.

## 15. பயணத்தின் சுன்னத்துகள்

1. பயணம் செல்லும் முன் ஸலாத்துஸ் ஸஃபர் எனும் பிரயாணத் தொழுகை 2 ரக்அத் நபில் தொழுதுவிட்டு புறப்பட வேண்டும்.

2. பயணம் நன்மையாகவும், பாதுகாப்பாகவும் அமைந்திட துஆ கேட்டுவிட்டு புறப்பட வேண்டும்.

3. சுபுஹு நேரத்தில் பயணம் செய்வதும், வியாழக்கிழமை பயணம் செய்வதும் சிறப்பானது.

4. பயணத்தின்போது யாராவது ஒருவரை தனது பயணக் கூட்டாளியாக ஆக்கிக் கொள்ள வேண்டும்.

5. மூன்று பேர்களுக்கு மேல் பயணம் செய்தால் அதில் ஒருவரை அமீராக (தலைவராக) ஏற்படுத்திக் கொள்ள வேண்டும்.

6. வீட்டை விட்டு புறப்படும்போது பிஸ்மில்லாஹி தவக்கல்த்து அலல்லாஹி லாஹவ்ல வலா குவ்வத்த இல்லா பில்லாஹ் என்று கூறி புறப்பட வேண்டும்.

7. வாகனத்தில் ஏறியதும் சுப்ஹானல்லதீ ஸஹ்ஹர லனா ஹாதா வமாகுன்னா லஹு முக்ரினீன் வஇன்னா இலா ரப்பினா லமுன்கலிபூன் என்ற துஆவை ஓதிய பின் அல்ஹம்துலில்லாஹ் என்பதை 3 முறையும், அல்லாஹு அக்பர் என்பதை 3 முறையும் அல்லாஹும்ம இன்னீ ளலம்த்து நஃப்ஸீ ளுல்மன் கஸீரா. வலா யங்ஃபிருத் துனூப இல்லா அன்த ஃபங்ஃபிர்லீ மங்ஃபிரத்தம் மின் இன்திக வர்ஹம்னி இன்னக அன்தல் ஙஃபூருர் ரஹீம் என்று ஓதிக் கொள்ள வேண்டும்.

8. பிரயாணம் முடித்து திரும்பி வரும்போது ஆயிபூன தாயிபூன ஆபிதூன லிரப்பினா ஹாமிதூன் என்று ஓதிக் கொள்ள வேண்டும்.

9. பயணத்திலிருந்து திரும்பி வந்து வீட்டிற்குள் செல்லும்போது அவ்பன் அவ்பன் லிரப்பினா தவ்பன் லாயுஹாதிரு அலைனா ஹவ்பன் என்று சொல்லிக் கொண்டு நுழைய வேண்டும்.

10. யாராவது பயணம் சொல்லிக் கொண்டு வந்தால் அவர்களுக்கு அஸ்தவுதிஉல்லாஹ தீனக்க வஅமானதக்க வஹவாதீம அமலிக்க என்று துஆச் செய்து அனுப்பி வைக்க வேண்டும்.

## 16. மல ஜலம் கழித்தலின் சுன்னத்துகள்

1. அல்லாஹும்ம இன்னீ அஊது பிக்க மினல் குபுஸி வல் கபாயிஸி என்று கூறிச் செல்ல வேண்டும்.

2. கிப்லா திசையை முன்னோக்கியோ, பின்னோக்கியோ உட்காரக் கூடாது.

3. இடது காலை முன் வைத்து செல்ல வேண்டும்.

4. தலையை மூடி, காலணி அணிந்து செல்ல வேண்டும்.

5. அல்லாஹ் ரசூலின் பெயர்கள் - குர்ஆன் ஆயத்துகள் எழுதப் பட்டவைகளை வெளியில் வைத்துவிட்டுச் செல்ல வேண்டும்.

6. வெளியே வரும் வரை யாரிடமும் பேசக் கூடாது.

7. முடியாதவர்களைத் தவிர மற்றவர்கள் யாரும் நின்ற நிலையில் சிறுநீர் கழிக்கக் கூடாது.

8. இடது கையால் சுத்தம் செய்ய வேண்டும்.

9. சுத்தம் செய்தபின் மண் அல்லது சோப்பால் கையை நன்றாக கழுவி சுத்தம் செய்ய வேண்டும்.

10. வலது காலை முன் வைத்து வெளியே வர வேண்டும்.

11. வெளியே வந்த பின் ஃகுஃப்ரானக்க அல்ஹம்து லில்லாஹில்லதீ அத்ஹப அன்னில் அதா வ ஆஃபானீ என்ற துஆவை ஓத வேண்டும்.

12. நிழல் தரும் மரங்கள் - நீர்த் தேக்கங்கள், மக்கள் நடந்து செல்லும் பாதைகள், கபரஸ்தான்கள், பொந்துகள் போன்ற இடங்களில் மலம். சிறுநீர் கழிப்பது கூடாது.

13. மலம், சிறுநீர் கழிக்கும்போது, ஸலாத்திற்கு பதில் கூறுவது, பாங்குக்கு பதில் கூறுவது தும்மல், கொட்டாவிக்கு பதில் சொல்வது கூடாது.

14. உணவுப் பொருட்கள், எலும்புகளில் சிறுநீர் கழிக்கக் கூடாது.

15. தேவையில்லாமல் கழிவறைகளில் அதிக நேரம் இருக்கக் கூடாது. அது ஷைத்தானின் வீடாகும்.

## 17. தூக்கத்தின் சுன்னத்துகள்

1. இஷாவிற்குப் பின் சீக்கிரமாக தூங்கிட வேண்டும்.

2. வீண் பேச்சுகளைத் தவிர்த்திட வேண்டும்.

3. தூங்கும் முன் ஆடைகளை மாற்றிக் கொள்ள வேண்டும்.

4. உளூ செய்து மூன்று முறை சுர்மா இட்டுக் கொள்ள வேண்டும்.

5. மூன்று முறை படுக்கையை உதறிக் கொள்ள வேண்டும்.

6. அஸ்தக்பிருல்லாஹ் என்று இஸ்திக்ஃபார் ஓதிக் கொள்ள வேண்டும். ஆயத்துல் குர்ஸீயும், ஆமனர் ரசூலும் ஓதிக் கொள்ள வேண்டும்.

7. சுப்ஹானல்லாஹ் - 33, அல்ஹம்துலில்லாஹ் - 33, அல்லாஹ் அக்பர் - 34 முறையும் ஓதிக்கொள்ள வேண்டும்.

8. குல்ஹுவல்லாஹு அஹத், குல்அஊது பிரப்பில் பலக், குல்அஊது பிரப்பின்னாஸ் ஆகிய மூன்று சூராக்களையும் ஓதி இரு கைகளிலும் ஊதி உடல் முழுவதும் தடவிக் கொள்ள வேண்டும்.

9. வலது பக்கம் படுத்து வலது கையை வலது கன்னத்தின் கீழ் வைத்து படுக்க வேண்டும்.

10. தூக்கத்தில் கெட்ட கனவுகள் வந்தால் அஊதுபில்லாஹி மினஷ் ஷைத்தானிர்ரஜீம் என்று ஓதி படுத்திருந்த பக்கம் மூன்று முறை துப்பிவிட்டு வேறு பக்கம் படுத்துக்கொள்ள வேண்டும்.

11. தலையணையில் தலைவைக்கும்போது ரப்பி கினீ அதாபக்க யவ்ம தப்அஸு இபாதக்க என்று கூறி படுக்க வேண்டும்.

12. ஆண்கள் குப்புற படுக்கக் கூடாது.

13. பெண்கள் மல்லாந்து (நிமிர்ந்து) படுக்கக் கூடாது.

14. தூங்கும் முன் அல்லாஹும்ம பிஸ்மிக்க அமூத்து வஅஹ்யா என்ற துஆவை ஓதி கொள்ள வேண்டும்.

15. தூங்கி எழுந்த பின் அல்ஹம்து லில்லாஹில்லதீ அஹ்யானா பஃதமா அமாதனா வஇலைஹின் நுஷூர் என்ற துஆவை ஓதி கொள்ள வேண்டும்.

16. தூங்கி எழுந்த பின் இரண்டு கைகளால் முகத்தையும், கண்ணையும் தேய்த்துக் கொள்ள வேண்டும்.

17. தூங்கி எழுந்ததும் மிஸ்வாக் செய்து வாயை சுத்தம் செய்ய வேண்டும்.

## 18. நகம் வெட்டுவதின் சுன்னத்துகள்

1. கை விரல்களில் உள்ள நகங்களை வெட்டும்போது :

2. முதலில் வலது கையின் கலிமா விரல் (ஆட்காட்டி விரல் நகத்தை வெட்ட வேண்டும்.

3. அடுத்து நடு விரல், அடுத்து மோதிர விரல் நகத்தையும், அடுத்து சுண்டு விரல் நகத்தையும் வெட்ட வேண்டும்.

4. இடது கையின் நகத்தை வெட்டும் போது முதலில் சுண்டு விரல், அடுத்து மோதிர விரல், அடுத்து நடுவிரல் நகத்தையும் அடுத்து கலிமா விரல் நகத்தையும், அடுத்து பெருவிரல் நகத்தையும் வெட்ட வேண்டும். கடைசியாக வலது கையின் பெருவிரல் நகத்தை வெட்ட வேண்டும்.

5. கால் விரல் நகங்களை வெட்டும் போது முதலில் வலது காலின் சுண்டு விரலில் ஆரம்பித்து வரிசையாக வந்து பெருவிரலில் முடிக்க வேண்டும். பிறகு இடது காலின் சுண்டு விரலில் ஆரம்பித்து வரிசையாக வந்து பெருவிரலில் முடிக்க வேண்டும்.

6. வாரம் ஒரு முறை வெள்ளிக்கிழமை நகங்களை வெட்டி சுத்தம் செய்ய வேண்டும். அதிகபட்சமாக 15 நாளுக்கு ஒருமுறை வெட்டி சுத்தம் செய்ய வேண்டும்.

7. நகங்களைக் கடிப்பதோ, கண்ட கண்ட இடங்களில் துப்பவோ கூடாது.

8. நகங்களை நீளமாக வளர்க்கக் கூடாது.

9. நகங்களுக்கு நகபாலிஷ் போடக் கூடாது. அவ்வாறு போடுவதால் உழூவும் கடமையான குளிப்பும் நிறைவேறாது.

## 19. செருப்பு அணிவதின் சுன்னத்துகள்

1. செருப்பு அணிவது உடலுக்கும், மூளைக்கும் நல்லதாகும். மேலும் நபி (ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்) அவர்களின் வழிமுறையாகும்.

2. செருப்பு அணியும் பழக்கமில்லாதவரின் சாட்சியம் ஏற்றுக் கொள்ளப்பட மாட்டாது.

3. செருப்பு, ஷூ அணியும்போது நன்றாக தட்டிவிட்டு அணிய வேண்டும். ஏனெனில் அதில் ஏதேனும் அசுத்தமோ, விஷ பூச்சிகளோ இருக்கக் கூடும்.

4. அணியும்போது முதலில் வலது காலிலும் பின்னர் இடது காலிலும் அணிய வேண்டும்.

5. கழற்றும்போது முதலில் இடது காலையும் பிறகு வலது காலையும் கழற்ற வேண்டும்.

6. ஒற்றைக் கால் செருப்புடனும் கிழிந்த செருப்புடனும் நடக்கக் கூடாது. அது வறுமையை ஏற்படுத்தும்.

7. ஓரிடத்தில் நமது செருப்பு காணாமல் போய்விட்டால் அதற்கு பதிலாக மற்றவரின் செருப்பை எடுத்துக்கொள்ளக் கூடாது.

8. அடுத்தவரின் செருப்பை திருடி அணிபவருக்கு மறுமையில் நெருப்பாலான செருப்பு அணிவிக்கப்படும்.

9. கழிவறை செல்லும்போது அவசியம் செருப்பு அணிந்து செல்ல வேண்டும்.

## 20. நலம் விசாரிப்பதின் சுன்னத்துகள்

1. எந்த நோயாளியை பராமரிக்கவும் பார்த்துக் கொள்ளவும் ஆள் இருக்கிறார்களோ அந்த நோயாளியை நலம் விசாரிக்கச் செல்வது சுன்னத்தாகும்.

2. எந்த நோயாளியை பராமரிக்கவும் பார்த்துக் கொள்ளவும் யாருமே இல்லையோ அந்த நோயாளியை நலம் விசாரிப்பது பர்ளு கிஃபாயாவாகும்.

3. நோய் என்று கேள்விப்பட்ட உடனே நலம் விசாரிக்க வேண்டும்.

4. நோய் நலம் விசாரிக்கச் செல்வதால் 70 ஆயிரம் மலக்குகள் துஆ செய்கிறார்கள்.

5. நோய் விசாரிக்கச் சென்றால் அவருக்காக நாம் துஆச் செய்ய வேண்டும். நமக்காக துஆச் செய்யும்படி அவரிடம் வேண்டிக் கொள்ள வேண்டும். நோயாளியிடம் அவரது மனம் ஆறுதலும், நிம்மதியும் தைரியமும் ஏற்படும் வகையில் பேச வேண்டும்.

6. நோயாளியின் பக்கத்தில் தேவையில்லாமல் அதிக நேரம் அமர்ந்திருக்கக் கூடாது.

7. இவர் இருந்தால் நோயாளி மிகவும் சந்தோஷப்படுவார் என்றிருந்தால் அவர் இருப்பது நல்லது.

8. நோயாளிக்கு அருகில் உட்கார்ந்து கொண்டு சப்தமிடவோ, வாக்குவாதம் செய்வதோ கூடாது.

9. நோய் நலம் விசாரிக்கச் செல்லும்போது உளு செய்து கொண்டு போவது நல்லது. அல்லாஹ்வின் பொருத்தம் நாடியும் நன்மையை நாடியும் நோய் நலம் விசாரிக்க செல்ல வேண்டும்.

10. நோயாளியை சந்தித்தவுடன் “லா பஃஃஸ தஹூருன் இன்ஷா அல்லாஹ்” என்று துஆ ஓத வேண்டும்.

11. நோயாளி நமது உறவினர், அன்னியர், தெரிந்தவர் யாராக இருந்தாலும் நலம் விசாரிப்பது நல்ல மனிதனின் பண்பாகும்.

12. அஸ்அலுல்லாஹல் அளீம்ரப்பல் அர்ஷில் அளீம் அய்யஷ்ஃஃபியக்க என்ற துஆவை 7 முறை ஓதி நோயாளி மீது ஊதினால் சீக்கிரத்தில் குணமாகிவிடுவார். (இன்ஷா அல்லாஹ்)



# அவசியமான சட்டங்கள்

## 1. தொழுகையை ஆரம்பிப்பதற்கு முன்

1. தொழுகையை ஆரம்பிப்பதற்கு முன் கிப்லா திசையை முன்னோக்கி ஸஜ்தாச் செய்யும் இடத்தைப் பார்த்தவாறு நேராக நின்று கொள்ளுங்கள். தலையையோ, நெஞ்சையோ கீழே தாழ்த்தியவாறு நிற்பது மக்ரூஹ் ஆகும். தலை முதல் கால்வரை அனைத்து உறுப்புகளும் நேராக இருக்க வேண்டும்.

2. உங்களின் கால் பாதங்கள் மட்டுமின்றி கால் விரல்களும் கிப்லாவை முன்னோக்கி இருக்க வேண்டும்.

3. இரண்டு பாதங்களுக்குமிடையே குறைந்தபட்சம் நான்கு விரல்களின் அளவு இடைவெளி இருக்க வேண்டும்.

4. இருகால்களையும் சேர்த்தோ, பெரிய இடைவெளி இருக்கும் விதத்தில் விரித்தோ வைக்கக்கூடாது.

5. நீங்கள் ஜமாஅத்துடன் தொழுதால் அப்போது ஸஃப்பில் நிற்கும் அனைவரின் பின்னங்கால்களும் ஒரே கோட்டில் இருக்க வேண்டும்.

6. உங்களின் வலது, இடது பக்கங்களில் நின்றிருப்பவர்களுடன் உங்களின் தோள் ஒட்டியிருக்க வேண்டும்.

7. உங்களின் கீழாடை உங்களின் கரண்டைக்காலுக்குக் கீழே படுமாறு இருக்கக் கூடாது. இச்செயல் எல்லா நேரங்களிலும் மார்க்கத்தில் தடுக்கப்பட்ட செயலாகும். தொழுகையில் இது இன்னும் முக்கியத்துவம் பெறுகிறது.

8. முடிந்தவரை மணிக்கட்டுவரை மறைக்கக்கூடிய முழுக்கை சட்டை அணிந்து தொழுவது நல்லது. ஏனெனில் அரைக்கை சட்டை அணிந்து தொழுவது மக்ரூஹ் ஆகும்.

## 2. தொழுகையை ஆரம்பிக்கும் போது...

1. நீங்கள் தொழப்போகும் தொழுகையை மனதில் நிய்யத் செய்து கொள்ளுங்கள். உதாரணமாக பஜ்ரின் பர்ளு - இரண்டு ரக்அத்கள் கிப்லாவை முன்னோக்கி அல்லாஹ்வுக்காக தொழுகிறேன். நாவில் அதனைக் கூறுவது கட்டாயமல்ல. இமாமுக்குப்பின் தொழுதால் இந்த இமாமைப் பின்பற்றித் தொழுகிறேன் என்ற வாசகத்தையும் சேர்த்துக் கொள்ளுங்கள்.

2. இரு உள்ளங்கைகளும் கிப்லாவை முன்னோக்கி இருக்குமாறு கைகளை காதுவரை உயர்த்துங்கள். அதாவது உங்களின் பெருவிரல் நுனிகள் காது சோனையைத் தொடும் விதத்திலோ அல்லது அதற்குச் சமமாகவோ உயர்த்த வேண்டும். இதற்கு மாற்றமாக உள்ளங்கைகளை காதுகளின் பக்கம் முன்னோக்கியவாறு உயர்த்துவது, காது சோனைக்கு மேல்வரை உயர்த்துவது, காதுவரை உயர்த்தாமல் தோள் புஜத்துக்கு சற்றுமேல் வரை உயர்த்துவது, காது சோனையைக் கைகளால் பிடித்துக் கொள்வது இவையனைத்தும் சுன்னத்துக்கு மாற்றமான தவறான வழிமுறைகளாகும். இவற்றை முற்றிலும் தவிர்த்துக்கொள்ள வேண்டும்.

3. கைகளை உயர்த்தும் போது அல்லாஹு அக்பர் என்று கூறி உயர்த்திய பின் வலது கையின் பெருவிரலாலும் சுண்டு விரலாலும் இடது கை மணிக்கட்டுப் பகுதியை வளையமிட்டுப் பிடித்துக் கொள்ளுங்கள். மீதியுள்ள மூன்று விரல்களை இடது கையின் மேற்பகுதியில் முழங்கையை நோக்கி நீட்டி வையுங்கள். இரு கைகளையும் தொப்புளுக்குச் சற்றுக் கீழே வைத்து மேற்சொன்ன முறையில் கட்டிக் கொள்ளுங்கள்.

## 3. நிலையில் கவனிக்க வேண்டியவை

1. தனியாகத் தொழும்போது சுப்ஹானகல்லாஹும்ம என்று ஆரம்பிக்கும் தனாவையும் அல்ஹம்து சூரா மற்றும் துணை சூராவை ஓதவேண்டும். இமாமுக்குப் பின் நீங்கள் தொழுதால் தக்பீர் கட்டிய பின் தனா மட்டும் ஓதிவிட்டு இமாம் ஓதுவதை கவனமாகக் கேளுங்கள். இமாம் லுஹர் அஸர் தொழவைத்தால் அப்போது நீங்கள் நாவை அசைக்காமல் மனதுக்குள் அல்ஹம்து சூராவை ஓதிக் கொள்ளுங்கள். சிந்தனை மாறாமலிருக்க இது உதவும்.

2. தேவையில்லாமல் உடலுறுப்புக்களை அசைக்காதீர்கள். அமைதியாக நில்லுங்கள். சொறிய வேண்டிய ஏதேனும் தேவையேற்பட்டால் அது மிக நிர்பந்தமாக இருந்தால் மட்டும் ஒரேயொரு கையை பயன்படுத்துங்கள்.

3. உடலின் மொத்த எடையையும் ஒரு காலுக்குக் கொடுத்து இன்னொரு காலை சாய்த்து நிற்பது மக்ரூஹ் ஆகும். இது தொழுகையில் ஒழுக்கமற்ற செயல். எனவே இரண்டு கால்களையும் நேராக வைத்து உடலின் எடையை அவையிரண்டும் தாங்குமாறு செய்து நிற்க வேண்டும்.

4. கொட்டாவி வந்தால் முடிந்தவரை வாயை மூடி அதனை அடக்கிக் கொள்ளுங்கள். முடியாத பட்சத்தில் வலதுகையின் புறங்கையை வைத்து வாயை மறைத்துக் கொள்ளுங்கள்.

5. தொழுகையின் போது கொட்டாவி வந்தால் அஊது பில்லாஹ் கூறுவதோ, தும்மல் வந்தால் அல்ஹம்துலில்லாஹ் கூறுவதோ கூடாது.

6. நிற்கும் போது ஸஜ்தாச் செய்யும் இடத்தின் மீதே பார்வை இருக்க வேண்டும். தனது வலது, இடது புறங்களில் பார்வையைத் திருப்புவது மக்ரூஹ் ஆகும்.

## 4. ருகூஉ செய்யும் சரியான முறை

1. ருகூஉ வுக்காகக் குனியும் போது தலை, முதுகு, பித்தட்டு மூன்றும் சமமாக ஒரே நேர்க்கோட்டில் இருக்கும் விதத்தில் குனியுங்கள். முதுகை விட தலை உயரமாகவோ, தாழ்வாகவோ இருக்கக்கூடாது. தாழ்வாய் பகுதி நெஞ்சோடு ஒட்டக்கூடாது.

2. கால்களை வளைவில்லாமல் நேராக வையுங்கள்.

3. வலது கையால் வலது முழங்காலையும் இடது கையால் இடது முழங்காலையும் பிடித்துக் கொள்ளுங்கள். உங்கள் கை விரல்களை முழங்காலின் மீது விரித்து வையுங்கள்.

4. முழங்கைக்கு மேலுள்ள பகுதியை விலாவோடு சேர்க்காமல் வளைவின்றி நேராக வையுங்கள்.

5. மூன்று முறை சுப்ஹான ரப்பியல் அளீம் சொல்லும் அளவு ருகூஉ செய்யுங்கள்.

6. ருகூஉ செய்யும் போது கால்விரல்களின் மீது பார்வையை செலுத்துங்கள்.

7. இரு கால்களுக்கிடையே நிலையின் போதுள்ள அதே இடைவெளி இருப்பதும் இரு குதிங்கால்களும் நேர்கோட்டை விட்டும் திரும்பாமல் இருப்பதும் அவசியம்.

## 5. ருகூஉ விலிருந்து எழுந்திருக்கும் போது

1. ருகூஉ விலிருந்து எழுந்திருக்கும் போது நேராக எழுந்து நில்லுங்கள்.

2. எழுந்து நிற்கும் போது ஸஜ்தா செய்யும் இடத்தில் பார்வையைச் செலுத்துங்கள்.

3. நேராக எழுந்து நிற்காமல் நிலைக்குச் சமீபமாக எழுந்து விட்டு அப்படியே ஸஜ்தாவுக்குச் செல்வது கூடாது.

## 6. ஸஜ்தாவுக்குச் செல்லும் போது...

1. ஸஜ்தாவுக்குச் செல்லும் போது முதலில் இரு முழங்கால்களையும் தரையில் வையுங்கள்,

2. அவை தரையில் நன்றாகப் பதிந்ததும் நெஞ்சைக் கீழே கொண்டு செல்லுங்கள். சிலர் கைகளை முதலில் ஊன்றிவிட்டு பிறகு முழங்காலை வைக்கின்றனர். இது கண்டிப்பாக தவிர்க்கப்பட வேண்டியதாகும். தகுந்த காரணமின்றி இவ்வாறு செய்யக்கூடாது.

3. முழங்கால்களை வைத்தபிறகு, முதலில் இருகைகளையும் பிறகு மூக்கையும் அதன் பிறகு நெற்றியையும் தரையில் வையுங்கள்,

## 7. ஸஜ்தாச் செய்யும் சரியான முறை

1. ஸஜ்தாவில் இரு கைகளுக்கும் நடுவில் தலையை வையுங்கள். இருகை பெருவிரல்களின் நுனிகள் காது சோனைக்கு நேராக இருக்கட்டும்.

2. இரு கைகளின் விரல்களையும் இடைவெளி விடாமல் சேர்த்து வையுங்கள். விரல் நுனிகள் கிப்லாவை முன்னோக்கி இருக்க வேண்டும்.

3. மணிக்கட்டிலிருந்து முழங்கை வரையுள்ள பகுதியை தரையில் படுக்க வைக்காமல் உயர்த்திக் கொள்ளுங்கள்.

4. முழங்கைக்கு மேலுள்ள பகுதியை விலாவோடு சேர்க்காமல் விலக்கி வையுங்கள்.

5. அருகில் தொழுபவருக்கு இடையூறு ஏற்படும் விதத்தில் முழங்கைகளை அதிகமாக விரிக்க வேண்டாம்.

6. இரு தொடைகளையும் வயிற்றோடு ஒட்டாமல் விலக்கி வையுங்கள்.

7. ஸஜ்தா செய்து முடிக்கும் வரை மூக்கு தரையில் பதிந்திருக்க வேண்டும்.

8. இரு கால்களையும் நட்டவைத்து அவற்றின் விரல்களை கிப்லாவை முன்னோக்கி திருப்பி வையுங்கள். அனைத்து விரல்களையும் திருப்ப முடியாதவர்கள் முடிந்தளவுக்கு செய்யலாம். ஸஜ்தாவின் போது கால்களை தரையை விட்டும் உயர்த்தி விடாதீர்கள். சிலர் ஸஜ்தாச் செய்யும் போது ஒரு விரல் கூட தரையில் இல்லாமல் உயர்த்தி விடுகிறார்கள். இதனால் ஸஜ்தா கூடாது. ஸஜ்தா கூடாவிட்டால் தொழுகையும் நிறைவேறாது. எனவே இதனை கவனத்தில் வையுங்கள்.

9. ஸஜ்தாவின் போது உங்கள் மூக்கின் மீது பார்வையை செலுத்துங்கள்.

10. குறைந்தபட்சம் சுப்ஹான ரப்பியல் அஃலா என்று மூன்று முறை நிதானமாகச் சொல்லும் அளவுக்கு ஸஜ்தாச் செய்யுங்கள். நெற்றியை தரையில் வைத்தவுடனே எடுத்து விட்டால் ஸஜ்தா கூடாது.

## 8. இரண்டு ஸஜ்தாக்களுக்கிடையில்...

1. இரண்டு ஸஜ்தாக்களுக்கிடையில் அமர்வதற்கு சிறு இருப்பு என்று பெயர்.

2. முதல் ஸஜ்தாவிலிருந்து எழுந்து நிம்மதியாக அமர்ந்தபின்

3. இரண்டாவது ஸஜ்தா செய்யுங்கள். முதல் ஸஜ்தாவிலிருந்து தலையை மட்டும் லேசாகத் தூக்கிவிட்டு இரண்டாவது ஸஜ்தா செய்யக்கூடாது. அதனால் திருப்பித் தொழுவது கடமையாகும்.

4. இடது காலை விரித்து அதன்மீது அமருங்கள். வலது காலை நட்டவைத்து அதன் விரல்களை கிப்லாவை முன்னோக்கித் திருப்புங்கள். சிலர் இருகால்களையும் நட்டவைத்து குதிங்கால்களின் மீது உட்காருவர். இது சரியான முறையல்ல.

5. அமர்ந்திருக்கும் போது இரு கைகளையும் தொடையின் மீது வையுங்கள். கைகளின் விரல்களை முழங்காலின் மீது தொங்க விடாமல் விரல்கள் முழங்காலின் ஆரம்பப் பகுதி வரை அடையுமாறு நீட்டி வையுங்கள்.

6. அமர்ந்திருக்கும் நிலையில் உங்களின் பார்வையை தொடைகளின் மீது செலுத்துங்கள்.

7. ஒருமுறை சுப்ஹானல்லாஹ் சொல்லும் அளவுக்கு அமர்ந்தபின் அடுத்த ஸஜ்தாவுக்குச் செல்லுங்கள்.

## 9. இரண்டாவது ஸஜ்தாவும் எழுந்திருத்தலும்

1. இரண்டாவது ஸஜ்தாவுக்குச் செல்லும் போது முதலில் இருகைகளையும் பிறகு மூக்கையும் பிறகு நெற்றியையும் தரையில் வையுங்கள்.

2. முன்பு சொல்லப்பட்ட அதேமுறையில் ஸஜ்தா செய்யுங்கள்.

3. ஸஜ்தாவிலிருந்து எழுந்திருக்கும் போது முதலில் நெற்றியையும் பிறகு மூக்கு, பிறகு கைகள், பிறகு முழங்கால்களை தரையிலிருந்து உயர்த்துங்கள்.

4. ஸஜ்தாவிலிருந்து எழுந்து ஒவ்வொரு ரகஅத்தை ஆரம்பிக்கும் போதும் முதலில் பிஸ்மில்லா ஹிர்ரஹ்மானிர்ரஹீம் ஓதிவிட்டு அல்ஹம்து சூராவை ஆரம்பியுங்கள்.

## 10. இருப்பில் அமரும் முறை

1. இரு ஸஜ்தாக்களுக்கிடையே உள்ள அமர்வுக்கு சொல்லப்பட்ட அதே முறையில்தான் இதிலும் அமரவேண்டும்.

2. அத்தஹிய்யாத்து ஓதும்போது அஷ்ஹது அன்லா இலாஹ என்று சொல்லும் போது வலது கையின் கலிமா விரலை உயர்த்தி இல்லல்லாஹ் என்று சொல்லும் போது கீழே வையுங்கள்.

3. அவ்வாறு உயர்த்தும் போது பெருவிரலையும் நடுவிரலையும் இணைத்து வட்டமிட்டுக் கொள்ளுங்கள். மீதியிரண்டு விரல்களை மடக்கிக் கொள்ளுங்கள். கலிமா விரலை கிப்லாவை முன்னோக்கி உயர்த்தினால் போதும். வானத்தை நோக்கி உயர்த்தக் கூடாது.

4. இல்லல்லாஹ் என்று சொல்லி கலிமா விரலைக் கீழே வைக்கும் போது மற்ற விரல்களை கடைசிவரை அதே அமைப்பில் விட்டு விடுங்கள். விரல்களை கலைக்க வேண்டாம்.

## 11. ஸலாம் கொடுத்தலின் சரியான முறை

1. தொழுகையை முடித்து ஸலாம் கொடுக்கும் போது பின்னால் அமர்ந்திருப்பவர் உங்கள் முகத்தைப் பார்க்கும் அளவுக்கு கழுத்தைத் திருப்புங்கள்.

2. ஸலாம் கொடுக்கும் போது தோள் புஜத்தின் மீது பார்வையைச் செலுத்துங்கள்.

3. வலது பக்கமாக அஸ்ஸலாமு அலைக்கும் வரஹ்மத்துல்லாஹ் என்று சொல்லித் திரும்பும் போது வலது பக்கமுள்ள மலக்கு மற்றும் மனிதர்களுக்கும் இடது பக்கம் திரும்பும் போது இடதுபக்கம் உள்ள மலக்கு மற்றும் மனிதர்களுக்கும் ஸலாம் கூறுவதாக நிய்யத் செய்து கொள்ளுங்கள்.

## 12. துஆச் செய்யும் முறை

1. இரு கைகளையும் நெஞ்சுக்கு நேராக உயர்த்துங்கள். இரு கைகளையும் சேர்த்து வைக்காமல் அதிக இடைவெளி விட்டு

பிரித்தும் வைக்காமல் சிறு இடைவெளியுடன் உள்ளங்கைகள் முகத்தைப் பார்க்கும் விதத்தில் வையுங்கள்.

2. தலையை வானத்தை நோக்கி உயர்த்தாமல் சற்றுக் கீழே தாழ்த்திக் கொள்ளுங்கள்.

3. துஆச் செய்து முடித்தவுடன் இரு உள்ளங்கைகளையும் முகத்தில் தடவிக் கொள்ளுங்கள்.

## 13. பெண்கள் தொழும் முறை

1. மேலே இதுவரை கூறப்பட்ட முறை ஆண்களுக்குரிய தொழுகை முறையாகும், பெண்கள் தொழும் முறை இதிலிருந்து சற்று வேறுபடும். எனவே பெண்கள் தொழுவதற்குரிய வழிமுறை கீழே தரப்படுகிறது.

2. பெண்கள் தொழுகையை ஆரம்பிப்பதற்கு முன் அவர்களின் முகம், கைகள், கால் பாதங்களைத் தவிர மீதியுள்ள அனைத்து பாகங்களையும் கெட்டியான துணியால் மறைத்துக் கொள்ள வேண்டும்.

பெண்களில் சிலர் தலைமுடி வெளியே தெரியும் நிலையில் தொழுகின்றனர். சிலர் கைகள் வெளியே தெரியும் விதத்திலும் சிலர் காது வெளியே தெரியும் விதத்திலும் தொழுகின்றனர். சில பெண்கள் சிறிய துணியால் தலையை மறைக்கின்றனர். அதற்குக் கீழே முடி வெளியில் தெரிகின்றது. இவையனைத்தும் தவறான முறைகளாகும்.

தொழுது கொண்டிருக்கும் போது முகம், கை, கால்களைத் தவிர உடலின் மற்ற இடங்களில் நான்கில் ஒரு பகுதி சுப்ஹான ரப்பியல் அளீம் என்று மூன்று முறை சொல்லும்

நேரமளவு வெளியில் தெரிந்தால் தொழுகையே கூடாமல் போய்விடும். அதைவிடக் குறைவான நேரம் வெளியில் தெரிந்தால் குற்றம் ஏற்படும்,

3. பெண்கள் வீட்டின் உள்ளறையில் தொழுவது ஹாலில் தொழுவதைவிடச் சிறந்தது. ஹாலில் தொழுவது வெளிமுற்றத்தில் தொழுவதை விடச் சிறந்தது.

4. பெண்கள் தக்பீர் கட்டும் போது இரு கைகளையும் காதுவரை உயர்த்தாமல் தோள்புஜம் வரை உயர்த்த வேண்டும். கைகளை வெளியில் எடுக்காமல் ஆடைக்குள்ளாகவே உயர்த்த வேண்டும்.

5. பெண்கள் வலது உள்ளங்கையை இடதுகையின் மேற்புறத்தில் வைத்து நெஞ்சின் மீது கட்டிக் கொள்ள வேண்டும். ஆண்களைப் போல் தொப்புளுக்குக் கீழ் கட்டக்கூடாது.

6. ருகூஉவில் இடுப்பை சற்று வளைத்துக் கொள்ள வேண்டும். ஆண்களைப் போல் இடுப்பை நேராக வைக்க வேண்டிய அவசியம் இல்லை.

7. ருகூஉவில் முழங்காலின் மீது விரல்களை சேர்த்து வைக்க வேண்டும். விரல்களை விரிக்கக்கூடாது.

8. கால்களை நேராக வைக்காமல் முழங்கால்களை சற்று முன்னோக்கி வளைத்து வைக்க வேண்டும்.

9. ருகூஉ செய்யும் போது முழங்கைகளுக்கு மேலுள்ள பகுதியை விலாவோடு சேர்த்து வைக்க வேண்டும்.

10. ருகூஉவில் இரு கால்களையும் ஒட்டி வைக்க வேண்டும்.

11. ஆண்கள் ஸஜ்தாவுக்குச் செல்லும் போது முதலில் முழங்கால்களை தரையில் ஊன்றிய பிறகுதான் கைகளை வைக்க வேண்டும். ஆனால் பெண்கள் முதலில் கைகளை வைத்து ஸஜ்தாவுக்குச் செல்வது கூடும்.

12. ஸஜ்தாவில் வயிற்றை தொடையோடு ஒட்டி வைக்க வேண்டும். முழங்கைக்கு மேலுள்ள பகுதியை விலாவோடு ஒட்டி வைக்க வேண்டும். மேலும் கால்களை நட்டு வைக்காமல் இரு கால்களையும் வலது பக்கமாக வெளியாக்க வேண்டும்.

13. முழங்கையிலிருந்து மணிக்கட்டு வரையுள்ள பகுதியை பெண்கள் தரையில் படுக்க வைக்க வேண்டும்.

14. ஆண்கள் ருகூஉவில் விரல்களை விரித்தும் ஸஜ்தாவில் விரல்களைச் சேர்த்தும் வைக்க வேண்டும். மற்ற நிலைகளில் விரல்களை அவை இருக்கும் நிலையிலேயே விட்டு விடவேண்டும்.

ஆனால் பெண்கள் ருகூஉ, ஸஜ்தா, இரு ஸஜ்தாக்களுக்கு இடையிலுள்ள இருப்பு, அத்தஹிய்யாத் இருப்பு ஆகிய அனைத்திலும் விரல்களை இடைவெளியின்றி சேர்த்து வைக்க வேண்டும்.

15. பெண்கள் இருப்பில் அமரும் போது இருகால்களையும் வலது பக்கமாக வெளியாக்கி இடது பக்க பித்தட்டின் மீது அமரவேண்டும்.

16. பெண்கள் ஜமாஅத்தாகத் தொழுவது மக்ரூஹ் ஆகும். தனியாகத் தொழுவதுதான் அவர்களுக்குச் சிறந்தது. கணவர் அல்லது மஹ்ரமான ஆண்கள் வீட்டிலேயே ஜமாஅத்தாகத் தொழுதால் அதில் பெண்களும் சேர்ந்து தொழுவதில் தவறில்லை. அச்சமயத்தில் பெண்கள் ஆண்களுக்குச் சமமாகவோ, அருகிலோ நிற்காமல் அவர்களுக்குப் பின்னால் நிற்க வேண்டும்.

## 14. தொழுகையும் ஆடையும்

1. நமது தொழுகை பரிபூரணமாக நிறைவேறுவதில் நாம் அணிந்திருக்கும் ஆடைக்கும் பங்கிருக்கிறது. எனவே ஆடை குறித்த அவசியமான விஷயங்கள் இங்கே தரப்படுகிறது.

2. உடலுறுப்புகள் வெளியே தெரியும் படியான மெல்லிய ஆடை அணியக்கூடாது.

3. ஆண்கள் தொப்புளிலிருந்து முழங்கால் வரையிலும் மறைக்க வேண்டியது கட்டாயமாகும். மக்களுக்கு முன் இப்பகுதியை ஒரு போதும் திறக்கக்கூடாது. வேட்டி போன்ற ஆடைகளை பிறர் பார்க்கும் விதத்தில் முழங்காலுக்கு மேல் உயர்த்திக்கட்டுவது ஹராமாகும்.

4. ஆண்கள் தொழுகையின் போது மணிக்கட்டு வரை கைகள் மறையும் விதத்திலும் கால்கள் கரண்டைக் காலுக்கு மேல்வரை மறையும் விதத்திலும் ஆடை அணிந்திருக்க வேண்டும்.

5. பெண்கள் தங்களின் முகம், இருகை மணிக்கட்டுப்பகுதி, இரு கால் பாதங்கள் நீங்கலாக மீதியுள்ள அனைத்து பாகங்களையும் எல்லா நேரத்திலும் மறைத்திருக்க வேண்டும்.

6. ஆண்களில் சிலர் ஸஜ்தாவுக்குச் செல்லும்போது அவர்களின் சட்டை மேலேறி இடுப்புப் பகுதி வெளியில் தெரிகிறது. இதனால் தொழுகை கூடாமல் போய்விடும். தொப்புளிலிருந்து முழுங்கால் வரை உடலின் முன் பகுதியை மறைப்பது எப்படி அவசியமோ அதே அளவு பின்பகுதியை மறைப்பதும் அவசியமாகும்.

7. உருவப்படமுள்ள ஆடையை அணிந்து தொழுவது மக்ரூஹ் தஹ்ரீம் அகும்.

8. தொழும்போது நாம் அணிந்திருக்கும் ஆடை அசுத்தமில்லாமல் இருப்பது மட்டுமின்றி அழுக்குகளின்றி தூய்மையாகவும் இருக்க வேண்டும். இதற்கு அளவு கோலாக நமது மார்க்க அறிஞர்கள் எந்த ஆடையுடன் மக்களுக்கு முன் செல்வதை ஒருவர் விரும்ப மாட்டாரோ அந்த ஆடையுடன் தொழுவது மக்ரூஹ் ஆகும் என்று கூறியுள்ளார்கள்.

## 15. வாகனத்தில் தொழுதல்

1. நின்று தொழுவதற்கு சக்தி பெற்றவர் பர்ளு, வாஜிபு மற்றும் பஜ்ருடைய முன் சுன்னத் ஆகிய தொழுகைகளை இரயில், பேருந்து போன்ற எந்த வாகனத்திலும் அமர்ந்து தொழுவது கூடாது. அவ்வாறு தொழுதால் தொழுகை நிறைவேறாது. கீழே இறங்கிய பின் திருப்பித் தொழ வேண்டும்.

2. நின்று தொழ முடியாத காரணத்தால் அமர்ந்து தொழுவதற்கு நோயாளிக்கு மார்க்கம் சலுகை வழங்கியிருப்பதைப் போல் வாகனத்தில் பயணம் செய்யும் போதும் நின்று தொழ முடியாத நிலையிருப்பதால் அமர்ந்து தொழுவது கூடும் என சிலர் தவறாக விளங்கி அவ்வாறே தொழுது வருகின்றனர்.

ஆனால் நோயாளி அமர்ந்து தொழுவதை பயணி வாகனத்தில் அமர்ந்து தொழுவதோடு ஒப்பிடுவது சரியல்ல என்பதை மார்க்க அறிஞர்கள் தெளிவு படுத்தியுள்ளார்கள்.

3. நன்றாக நினைவில் வைத்துக் கொள்ளுங்கள் பர்ளு, வாஜிப், பஜ்ரின் முன்சுன்னத் இவைகளை நின்று தொழ சக்தியுள்ளவர் வாகனத்தில் தொழுதாலும் நின்றுதான் தொழ வேண்டும். இவையல்லாத மற்ற சுன்னத் மற்றும் நஃபில் தொழுகைகளை வாகனத்தில் அமர்ந்து தொழுவது கூடும்.

## 16. நாற்காலியில் அமர்ந்து தொழுதல்

1. நோயின் காரணமாக நின்று தொழ முடியாதவர் உட்கார்ந்து தொழுவதற்கு அனுமதியுண்டு. அத்தஹிய்யாத் இருப்பிலோ அல்லது சம்மணமிட்டோ தரையில் அமர்ந்து தான் தொழவேண்டும்.

2. இவ்விரு நிலையிலும் உட்காரமுடியாதவர்கள் மட்டுமே சேரில் அமர்ந்து தொழலாம். ஆனால் இன்று லேசான கால்வலி, மூட்டுவலி உள்ளவர்கள் கூட சேரில் அமர்ந்து தொழுகிறார்கள். கடைவீதியில் மணிக்கணக்காக நின்று பேசுபவர்கள் பள்ளிக்கு வந்தவுடன் சேரில் உட்கார்ந்து விடுகிறார்கள். இது கண்டிப்பாக தவிர்க்கப்பட வேண்டியதாகும்.

3. மேலே கூறியபடி பர்ளு, வாஜிப், பஜ்ரின் முன்சுன்னத் ஆகிய தொழுகைகளில் நிலை நிற்பது பர்ளாகும். தம்மால் ஒரு நிமிடம் கூட நிற்க முடியாது. தரையிலும் உட்கார முடியாது என்ற சூழ்நிலை இருந்தால் மட்டுமே சேரில் உட்கார

அனுமதியுண்டு. சிறிது நேரமாவது நிற்க முடிந்தவர்கள் முடிந்த அளவுக்கு நிற்பது கட்டாயமாகும். அவ்வாறின்றி ஆரம்பத்திலேயே உட்கார்ந்து விட்டால் அவர்களின் தொழுகை கூடாது.

4. மற்ற சுன்னத், நஃபில் தொழுகைகளை உட்கார்ந்து தொழுவது கூடும்.

## 17. தொழுகையில் பிந்தி வந்தால்...

ஜமாஅத் தொழுகை துவங்கிய பின் ஓரிரு ரகஅத் முடிந்த பிறகு வந்து சேருபவருக்கு மஸ்பூக் என்று சொல்லப்படும். இவர் தனக்கு விடுபட்ட ரக்அத்துகளை எப்படி நிறைவேற்ற வேண்டும் என்பதைக் காண்போம்.

### இரண்டு ரகஅத் தொழுகையில் [பஜ்ர், ஜும்ஆ] ஒரு ரகஅத்முடிந்த பின் வந்து சேர்ந்தால்...

இரண்டு ரக்அத் தொழுகையில் ஒரு ரகஅத் முடிந்த பின் அல்லது முதல் ரகஅத் ருகூஉவுக்குப் பின் வந்து சேர்ந்தால் இமாமுடன் இரண்டாவது ரகஅத்தைப் பூர்த்தி செய்து இருப்பில் இருக்கும் போது அத்தஹிய்யாத்து மட்டும் ஓதிவிட்டு இமாம் ஸலாம் கொடுக்கும் வரை அமைதியாக அமர்ந்திருக்க வேண்டும்.

இமாம் ஒரு பக்கம் ஸலாம் கொடுத்தபின் எழுந்து தனா ஓதி அல்ஹம்து சூரா, துணை சூரா ஓதி, ருகூஉ, ஸஜ்தா செய்து இருப்பில் அமர்ந்து அத்தஹிய்யாத், தரூத் ஷரீப், சுன்னத்தான துஆ ஆகியவற்றை முழுமையாக ஓதி ஸலாம் கொடுத்து தொழுகையை முடிக்க வேண்டும்.

## இரண்டு ரகஅத் தொழுகையில் இரண்டாவது ரக்அத்தில் ருகூஉக்குப் பின் வந்து சேர்ந்தால்

இரண்டு ரக்அத் தொழுகையில் இரண்டாவது ரக்அத்தில் ருகூஉவுக்குப் பிறகு வந்து சேருபவர் இமாம் ஸலாம் கொடுத்த பின் எழுந்து இரண்டு ரகஅத்தை முழுமையாகத் தொழ வேண்டும். முதல் ரகஅத்தில் தனா, அல்ஹம்து சூரா, துணை சூரா, இரண்டாவது ரக்அத்தில் அல்ஹம்து சூரா, துணை சூரா ஓத வேண்டும்.

## மூன்று ரகஅத் தொழுகையில் [மஃக்ரிப்] ஒரு ரகஅத் முடிந்த பிறகு வந்து சேர்ந்தால்...

இமாமுடன் இரண்டு ரகஅத் தொழுத பின் எழுந்து தனா ஓதி அல்ஹம்து சூரா, துணை சூரா ஓதி ருகூஉ, ஸஜ்தா, கடைசி இருப்பு ஆகியவற்றை நிறைவேற்றி ஸலாம் கொடுக்க வேண்டும்.

## மூன்று ரகஅத் தொழுகையில் இரண்டு ரக்அத் முடிந்த பின் வந்து சேர்ந்தால்.....

மூன்று ரக்அத் தொழுகையில் இரண்டு ரக்அத் முடிந்த பின் வந்து சேர்ந்தால், இமாமுடன் ஒரு ரகஅத்தைப் பூர்த்தி செய்துவிட்டு எழுந்து இரண்டு ரக்அத் தொழ வேண்டும். இரண்டிலும் அல்ஹம்து சூரா, துணை சூரா ஓதி, ருகூஉ, ஸஜ்தா செய்து முதல் ரக்அத்தில் அத்தஹிய்யாத்து மட்டும் ஓதி எழுந்து விடவேண்டும்.

இரண்டாவது ரக்அத்தில் அத்தஹிய்யாத்தும் மீதி உள்ளதையும் ஓதி முடித்து ஸலாம் கொடுக்க வேண்டும்,

**மூன்று ரகஅத் தொழுகையில் மூன்றாவது ரகஅத்தின் அத்தஹிய்யாத்தில் வந்து சேர்ந்தால்....**

இமாம் ஸலாம் கொடுத்த பின் தனியாகத் தொழுவது போல மூன்று ரக் அத்தையும் நிறைவேற்ற வேண்டும். அதாவது முதல் ரக அத்தில் இருப்பில் அமராமல் இரண்டாவது, மூன்றாவது ரக்அத்துகளில் இருப்பில் அமர்ந்து தொழுகையை நிறைவு செய்ய வேண்டும்.

**நான்கு ரகஅத் தொழுகையில் (லுஹர், அஸர், இஷா) ஒரு ரக்அத் முடிந்த பின் வந்து சேர்ந்தால்..**

இமாமுடன் மூன்று ரகஅத்தை முடித்த பின் எழுந்து தனா ஓதி அல்ஹம்து சூரா, துணை சூரா ஓதி இருப்பில் அமர்ந்து தொழுகையை நிறைவு செய்ய வேண்டும்.

**நான்கு ரகஅத் தொழுகையில் இரண்டு ரக்அத் முடிந்த பின் வந்து சேர்ந்தால்.....**

மீதமுள்ள இரண்டு ரகஅத்தை இமாமுடன் முடித்து விட்டு எழுந்து இரண்டு ரக அத் தொழ வேண்டும். இரண்டிலும் அல்ஹம்து சூரா, துணை சூரா ஓத வேண்டும். இரண்டாவது ரக அத்தில் மட்டும் இருப்பில் அமர்ந்து தொழுகையை நிறைவு செய்ய வேண்டும்.

**நான்கு ரகஅத் தொழுகையில் மூன்று ரகஅத் முடிந்த பின் வந்து சேர்ந்தால்....**

இமாமுடன் ஒரு ரகஅத் மட்டும் தொழுதுவிட்டு. எழுந்து தொழும் முதல் ரகஅத்தில் தனா, அல்ஹம்து சூரா, துணை சூரா ஓதி, ருகூஉ, ஸஜ்தா செய்து இருப்பில்

அமர்ந்து அத்தஹிய்யாத் மட்டும் ஓதிவிட்டு எழுந்து அடுத்த ரகஅத்தில் அல்ஹம்து சூரா, துணை சூரா ஓதி அந்த ரக அத்தில் இருப்பில் அமராமல் மூன்றாவது ரக்அத்தில் அல்ஹம்து சூரா மட்டும் ஓதிவிட்டு ருகூஉ ஸஜ்தா செய்து இருப்பில் அமர்ந்து அத்தஹிய்யாத்து, தரூத், துஆ ஓதி ஸலாம் கொடுக்க வேண்டும்.

## நான்கு ரகஅத் தொழுகையில் நான்காவது ரகஅத்தில் ருகூஉ வுக்குப் பிறகு வந்து சேர்ந்தால்...

இமாம் ஸலாம் கொடுத்த பின் ஆரம்பத்திலிருந்து தொழுவது போல் நான்கு ரக்அத்துகளையும் தொழ வேண்டும். முதல் இரண்டு ரக அத்துகளில் அல்ஹம்து சூரா, துணை சூரா ஓத வேண்டும். கடைசி இரண்டு ரக்அத்துகளில் அல்ஹம்து சூரா மட்டும் ஓத வேண்டும்.

## இரண்டு ஈதுபெருநாள் தொழுகையில் தாமதமாக வந்தால்

முதல் ரகஅத்தில் அதிகப்படியான தக்பீர் முடிந்த பிறகு வந்து சேர்ந்தால் தக்பீர் தஹ்ரீமா கூறி தொழுகையை ஆரம்பித்த பின் அதிகப்படியான மூன்று தக்பீர்களைத் தனியாகக் கூறி தக்பீர் கட்டிக் கொள்ள வேண்டும். தொடர்ந்து இமாமுடன் தொழ வேண்டும்.

இரண்டாவது ரகஅத்தில் வந்து சேர்ந்தால் இமாம் ஸலாம் கொடுத்த பின் எழுந்து ஒரு ரக அத் தொழ வேண்டும். அதில் அல்ஹம்து சூரா, துணை சூரா ஓதிய பின் அதிகப்படியான மூன்று தக்பீர் கூறி விட்டு ருகூஉ, ஸஜ்தா செய்து தொழுகையை நிறைவு செய்ய வேண்டும்.

## ரமலான் மாதத்தில் வித்ர் தொழுகையில் தாமதமாக வந்தால்...

ஒரு ரக அத் முடிந்த பிறகு வந்து சேர்ந்தால் முன்பு மஃக்ரிப் தொழுகைக்கு சொல்லப்பட்ட முறைப்படியே எழுந்து தொழவேண்டும். மூன்றாவது ரக அத்தின் ருகூஉவுக்குப் பிறகு வந்து சேர்ந்தால் மூன்று ரகஅத்திலும் அல்ஹம்து சூரா, துணை சூரா ஓதிவிட்டு மூன்றாவது ரகஅத்தில் ருகூஉவுக்கு முன் குனூத் ஓத வேண்டும்.

## இமாம் ஸஜ்தா ஸஹ்வு செய்தால்

ஜமா அத்துடன் சேர்ந்து தொழும் போது இமாம் ஸஜ்தா ஸஹ்வு செய்தால் பின் தொடர்ந்து தொழும் அனைவரும் ஸஜ்தா ஸஹ்வு செய்ய வேண்டும். தாமதமாக தொழுகையில் சேர்ந்தவரும் இமாமுடன் ஸஜ்தா ஸஹ்வு செய்து விட்டு இறுதியில் இமாம் ஸலாம் கொடுத்த பிறகு எழுந்து விடுபட்ட ரகஅத்துகளை தொழ வேண்டும்.

# 18. இதர சட்டங்கள்

## 1. பள்ளியில் நுழைதல்

பள்ளிக்குள் நுழையும் போது வலது காலை முன்வைத்து பிஸ்மில்லாஹி வஸ்ஸலாத்து அலா ரசூலில்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம், அல்லாஹும் மஃப்தஹ்லீ அப்வாப ரஹ்மதிக என்ற துஆவை ஓதிக் கொள்ளுங்கள்.

பள்ளிக்குள் நுழைந்தவுடன் இரண்டு ரக்அத் தஹிய்யத்துல் மஸ்ஜித் தொழுது கொள்ளுங்கள். தொழுகை நேரமாக இருந்தால் நீங்கள் தொழும் சுன்னத் அல்லது

பர்ளு தொழுகையுடன் இந்த நிய்யத்தையும் சேர்த்துக் கொள்ளுங்கள்.

பள்ளிக்குள் இருக்கும் வரை அல்லாஹ்வுக்காக இஃதிகாஃப் இருக்கின்றேன் என்று நிய்யத் செய்து கொள்ளுங்கள்.

பள்ளியினுள் நுழைந்தவுடன் முதல் ஸஃப்பில் உட்காருவது சிறப்பு. அங்கு இடமில்லா விட்டால் அதற்கடுத்த ஸஃப்புகளில் உட்காரலாம். எனினும் அதற்காக முன்னால் அமர்ந்திருப்பவர்களின் கழுத்துக்களைத் தாண்டி முந்திச் செல்லக் கூடாது.

## 2. தொழுகைக்காக ஓடி வரலாமா?

இகாமத் சொல்லும் போது அல்லது ஜமாஅத் நடந்து கொண்டிருக்கும் போது பள்ளிக்குள் வந்தால் அப்போதும் நிதானமாகத்தான் நடந்து வர வேண்டும். அந்த ரகஅத் கிடைக்க வேண்டும் என்பதற்காக வேகமாக ஓடிவரக் கூடாது. இதற்கு ஹதீஸில் தடை வந்துள்ளது. நிதானமாக வந்து சேர வேண்டும். விடுபட்ட ரகஅத்தை எழுந்து பூர்த்தி செய்ய வேண்டும்.

## 3. தொழுபவர்களைக் கடந்து செல்லுதல்

தொழுகையாளிகளுக்கு முன்னால் கடந்து செல்வதை தவிர்ந்து கொள்ளுங்கள். அதைப் பெரும் குற்றமாக மார்க்கம் எச்சரித்துள்ளது. ஆனால் 40 முழம் நீளமுள்ள பெரிய பள்ளியாக இருந்தால் தொழுது கொண்டிருப்பவருக்கு முன் இரண்டு ஸஃப் அளவு இடைவெளி விட்டு கடந்து செல்வது கூடும். அதைவிடச் சிறிய பள்ளிகளில் தொழுபவருக்கு

முன்னால் எத்தனை ஸஃப் காலியாக இருந்தாலும் சரி, அவரைக் கடந்து வரக் கூடாது. துண்டு, கர்ச்சீபைக் காட்டிக் கொண்டு வருவதும் கூடாது.

## 4. சுன்னத் தொழுகைகளின் சட்டம்

பர்ளு தொழுகைக்காக இகாமத் சொல்லிவிட்டால், சுன்னத் நஃபிலான எந்தத் தொழுகையையும் ஆரம்பிக்கக்கூடாது நேராக ஜமாஅத்துடன் சேர்ந்து விட வேண்டும்.

ஃபஜ்ர் தொழுகையின் முன் சுன்னத்துக்கு மட்டும் இதில் விதிவிலக்குள்ளது. பஜ்ரின் பர்ளுக்கு இகாமத் சொன்ன பின்பும் பஜ்ரின் முன்சுன்னத்தை வெளிப்பள்ளியிலோ அல்லது பள்ளியின் ஓரத்திலோ நின்று தொழுது கொள்ளலாம்.

ஆனால் பர்ளின் இரண்டாவது ரகஅத்தில் இமாமுடன் ருகூஉவில் சேர்ந்து விட முடியும் என்ற உறுதி இருந்தால்தான் முன்சுன்னத்தை தொழவேண்டும். இல்லாவிட்டால் விட்டுவிட வேண்டும்.

ஃபஜ்ரின் முன் சுன்னத் என்பது பர்ளுக்கு முன் தொழுவதே. பஜ்ருடைய பர்ளுக்குப் பின் எழுந்து முன் சுன்னத் தொழுவது கூடாது. பர்ளுக்குப் பின் இஷ்ராக் நேரம் வரை எந்தத் தொழுகையும் தொழக் கூடாது.

லுஹரின் முன் சுன்னத்தைத் தொழ நேரம் கிடைக்காவிட்டால் லுஹரின் பின் சுன்னத் இரண்டு ரகஅத்தை தொழுத பின் முன்சுன்னத் நான்கு ரகஅத்தை தொழுது கொள்ள வேண்டும்.

அஸர் - இஷா நேரங்களில் நான்கு ரகஅத் முன் சுன்னத் தொழுவதற்கு நேரமில்லையெனில் இரண்டு ரகஅத்தும் தொழுது கொள்ளலாம். ஆனால் லுஹர் மற்றும் ஜூமுஆவில் இவ்வாறு தொழக்கூடாது.

## 5. ஸஃப்பை ஆரம்பித்தல்

ஒவ்வொரு ஸஃப்பையும் இமாமுக்கு நேர் பின்னால் இருந்துதான் ஆரம்பிக்க வேண்டும். இமாமுக்குப் பின்னால் வலது, இடது பக்கமாக வந்து சேர்ந்து ஸஃப்பை பூர்த்தி செய்ய வேண்டும்.

முதல் ஸஃப் பூர்த்தியாகாமல் இரண்டாவது ஸஃப்பை ஆரம்பிக்கக் கூடாது.

பள்ளியின் ஓரத்திலிருந்து ஒருபோதும் ஸஃப்பை ஆரம்பிக்கக் கூடாது. அவ்வாறு யாரும் தனியாக நின்று கொண்டிருந்தால் அவரோடு போய்ச் சேரக் கூடாது.

ஸஃப்பில் சேருவதற்காக (வேறு வழியில்லாத போது) தொழுது கொண்டிருப்பவர்களை கடந்து வருவது கூடும்.

பொது இடங்களில் தொழுபவர் தனக்கு முன்னால் சுத்ரா தடுப்பு) வைத்துக் கொள்ள வேண்டும்.

ஸஃப்பில் நிற்கும் அனைவரும் தோளோடு தோள் சேர்த்து நெருக்கமாக நிற்க வேண்டும்.

பர்ளு தொழுகை முடிந்ததும் முன் ஸஃப்புகளில் தொழுபவர்கள் மஸ்பூக்காகத் தொழுபவர்களைத் தாண்டிக் கொண்டு பின்னால் வரக்கூடாது. கடந்து செல்ல

வழியில்லாவிடில் பர்ளு தொழுத இடத்திலேயே பின்சுன்னத் தொழுது கொள்ள வேண்டும். மக்கள் இந்த விஷயத்தில் மிகவும் கவனக்குறைவாக இருக்கிறார்கள். ஊ). ஜூமுஆ குத்பாவின் போது

ஜூமுஆ குத்பா ஓதுவதற்காக இமாம் மிம்பரில் ஏறிவிட்டால் அதற்குப்பின் சுன்னத் தொழுவது, பேசுவது, பிறருக்கு ஸலாம் கூறுவது, ஸலாமுக்கு பதில் கூறுவது அறவே கூடாது. குத்பா ஓதிமுடிக்கும் வரை அத்தஹிய்யாத்தில் அமர்வதைப் போல அமர்ந்து குத்பாவை செவிமடுக்க வேண்டும்..



# அருள்மறை சூராக்களின் சிறப்புகள்

குர்ஆனில் மொத்தம் 114 சூராக்கள் உள்ளன. எல்லா சூராக்களும் சிறப்பு பெற்றவையே. அதில் சில சூராக்கள் அதிக சிறப்பு பெற்றவை என்பது நாம் அறிந்த ஒன்றாகும்.

குர்ஆனின் ஒவ்வொரு எழுத்துக்களும் மனிதனின் நன்மையை உயர்த்துகிறது. அந்தஸ்தை உயர்த்துகிறது. பாவத்தைப் போக்குகிறது. நாட்டத்தை நிறைவு செய்து தருகிறது. நோயை நலமாக்குகிறது. உள்ளத்தை தூய்மைப் படுத்துகிறது.

இது உலகத்தின் மாபெரும் வெற்றிக்கு குர்ஆன் மிகப்பெரிய துணையாக இருக்கிறது என்பது முஃமினான ஒவ்வொரு மனிதனின் நம்பிக்கையாகவும் தெளிந்த நீரோடையாக தெரிந்த விஷயமாக இருப்பினும் குர்ஆனோடு நமக்குள்ள தொடர்பு மிக மிகக் குறைவு.

காலை சுப்ஹூத் தொழுதுவிட்டும் மாலை மக்ரிப் தொழுது விட்டும் குர்ஆன் ஓதிய இல்லங்களெல்லாம் இன்று வேறு விதமான சூழலில் உள்ளதைக் காண்கிறோம் எந்த பிரச்சனையாக இருந்தாலும் குர்ஆனை வைத்தே தீர்வையும் தெளிவையும் பெற்றார்கள் நமது முன்னோர்கள். ஆனால் இன்று சடங்கு சம்பிரதாயத்திற்காக மட்டும் குர்ஆனை உபயோகப்படுத்துகிற சூழ்நிலை.

சிறப்பு மிகுந்த சில சூராக்களை மாத்திரமே வாழ்நாள் முழுவதும் ஓதி வருகிறோம். அதனை ஓதுவதோடு முழு குர்ஆனையும் ஓதுகிற நடைமுறை நம்மிடத்தில் வரவேண்டும்

மனிதனின் கவலைக்கும் நோய்க்கும் சிறந்த நிவாரணியாக குர்ஆன் விளங்குகிறது. இன்றுள்ள சூழ்நிலையில் பல நபர்கள் கவலையாலும் நோயாலும் பீடிக்கப்பட்டுள்ளனர் குர்ஆனை கையில் எடுங்கள். அனைத்து கவலைகளும் நோய்களும் நீங்கும்.

வாழ்வின் அனைத்து விஷயங்களிலும் முன்னேற்றம் ஏற்பட குர்ஆனை ஓதுங்கள். மண்ணறையின் வேதனையை நீக்குகிற உயர்ந்த சக்தி குர்ஆனுக்கு உள்ளது மறுமை நாளில் குர்ஆன் ஓதிய மனிதர்களை குர்ஆனே சிபாரிசு செய்து சொர்க்கத்திற்கு அழைத்துச் செல்லும்.

எனவே நம்முடைய வாழ்வின் அனைத்து நிலைகளிலும் குர்ஆனோடு தொடர்பு கொள்ளக்கூடிய உயர்ந்த பாக்கியத்தை அல்லாஹ் வழங்குவானாக! ஆமீன்.

## 1. சூரத்துல் பாத்திஹாவின் சிறப்புகள்

அல்ஹம்து சூரா தான் சூரத்துல் பாத்திஹா ஆகும் இந்த சூரா நிறைய சிறப்புகளைக் கொண்டது

ஹஜ்ரத் அபூஸஅத் (ரலி) அறிவிக்கிறார்கள் நான் தொழுது கொண்டிருந்தேன். நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் என்னை அழைத்தார்கள். தொழுது கொண்டிருந்ததால் நான் பதிலளிக்கவில்லை. தொழுது முடிந்ததும் அவர்கள் சமுகம் சென்றேன்.

நான் உன்னை அழைத்த பொழுது ஏன் பதிலளிக்கவில்லை என்று அவர்கள் கேட்டார்கள். நான் தொழுகையில் இருந்தேன் என்று பதில் கூறினேன். அப்பொழுதும் தூதருக்கு பதிலளிப்பது அவசியமாகும்.

ஏனெனில் உண்மை விசுவாசிகளே அல்லாஹ்வுக்கும் அவனது தூதருக்கும் அவர்களுக்கு நிலையான நல்வாழ்வை அளிப்பான் வேண்டி உங்களை அவர்கள் அழைக்கும் பொழுது நீங்கள் பதிலளியுங்கள் என்று அல்லாஹ் கூறுகிறான் என்பதாக பெருமானார் (ஸல்) அவர்கள் கூறிவிட்டு நீங்கள் பள்ளிவாசலிலிருந்து வெளியில் செல்லும் முன்பாக திருக்குர்ஆனிலிருந்து ஒரு மகத்தான அத்தியாயத்தை கற்றுக் கொடுப்பேன் என்றார்கள்.

பின்னர் எனது கரத்தை பிடித்துக் கொண்டு பள்ளிவாசலுக்கு வெளியில் வந்தார்கள். நான் அவர்களுக்கு அவ்வத்தியாயத்தை பற்றி ஞாபகமூட்டினேன். அப்பொழுது பெருமானார் (ஸல்) அவர்கள் அதுதான் அல்ஹம்து சூராவாகும். அதில் ஏழு வசனங்கள் உள்ளன அது மகத்தான குர்ஆனாகும் அதனை இறைவன் எனக்கு அருளியிருக்கிறான் என்று கூறினார்கள். **நூல்: புகாரி**

நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கூறினார்கள்: எனது உயிர் எவனது கைவசம் உள்ளதோ அவன் மீது சத்தியமாக அல்ஹம்து சூராவைப் போன்ற ஒரு அத்தியாயம் தௌராத், இன்ஜீல், ஜபூர் வேதத்திலும் இல்லை. **நூல்: திர்மிதி**

அல்ஹம்து சூரா அனைத்து நோய்க்கும் நிவாரணியாக உள்ளது. **நூல்: பைஹகீ, தாரமீ**

பாம்பு தீண்டியவருக்கும் தேள் கொட்டியவருக்கும் பெருமானார் (ஸல்) அவர்களின் தோழர்கள் அல்ஹம்து சூராவை ஓதி ஊதி நிவாரணம் அளித்த நிகழ்வுகள் உள்ளது. **நூல்: முஸ்லிம், நஸயி**

அல்ஹம்து சூரா இல்லாமல் தொழுகை இல்லை என்று நபியவர்கள் கூறியுள்ளார்கள். **நூல்: புகாரி, முஸ்லிம்**

## அல்ஹம்து சூராவின் கருத்து

உலக இரட்சகனே, புகழுக்குரியவனே, அருளாளனே, அன்புடையோனே, தீர்ப்பு நாளின் அதிபதியே, எங்களையும் எங்களுடன் ஒன்றுபட்டவர்களையும் நேர்வழியில் நடத்துவாயாக,

உனது வழியில் எங்களை நடத்தாமல் உனது அருள் பெற்றவர்கள் சென்ற வழியில் எங்களை நடத்தி அருள்வாயாக! ஆமீன்! ஆமீன்

இதுவே எங்களின் பிரார்த்தனை ஆகும்.

## 2. சூரத்துல் பகராவின் சிறப்புகள்

இந்த சூரா திருக்குர்ஆனில் மிகப் பெரிய சூராவாக உள்ளது,

நபிகள் நாயகம் (ஸல்) அவர்களின் தோழர் உஸைது இப்னு ஹுலைர் (ரலி) அவர்கள் இரவு நேரத்தில் இந்த சூராவை சப்தமிட்டு ஓதிக் கொண்டிருந்தார்கள். அவரது குதிரை அவர் அருகில் கட்டப்பட்டிருந்தது. அது திடீரென குதிக்க ஆரம்பித்தது.

உஸைத் (ரலி) கூறுகிறார்கள். நான் ஓதுவதை நிறுத்தினேன், குதிரையும் அமைதியானது. பின்னர் ஓதத் துவங்கினேன், அதுவும் குதிக்கத் துவங்கியது. இவ்வாறு மூன்று முறை நிகழ்ந்தது. எனது குழந்தை யஹ்யா அருகில் தூங்கிக் கொண்டு இருந்தார். குதிரை அக்குழந்தையை மிதித்து விடுமோ என அஞ்சினேன். மேல் நோக்கி அண்ணாந்து பார்த்தேன். ஒளிமயமான மேகம் ஒன்று தென்பட்டது. அதிலிருந்து ஒளிக்கதிர்கள் வெளித் தோன்றிப் பிரகாசித்தன. பின்னர் அதனை பார்க்க வெளியே வந்தேன்.

நடைபெற்ற இந்த சம்பவத்தை பெருமானார் (ஸல்) அவர்களிடம் அதிகாலையில் சென்று கூறினேன். வானவர்கள் உங்களின் திருக்குர்ஆன் ஓசையை கேட்பதற்காக வந்திருக்கின்றனர். நீங்கள் அதிகாலை வரை ஓதிக்கொண்டிருந்தீர்களென்றால் அவர்களும் இருந்திருப்பார்கள். எல்லோரும் பார்த்திருக்கலாம். இப்னு ஹுலைரே! அதை ஓதிக் கொண்டிருங்கள் என்று பெருமானார் (ஸல்) அவர்கள் கூறினார்கள். **நூல்: புகாரி, முஸ்லிம்**

சூரத்துல் பகராவை ஓதிக் கொண்டிருங்கள். இதனை ஓதுவதால் வாழ்வில் அபிவிருத்தியும் ஓதுவதை விடுவதால் நஷ்டமும் ஏற்படுகின்றன. ஏமாற்ற நினைப்பதும் எதிர்த்து தாக்க எண்ணுவதும் இத2ன் முன்னால் நிற்க முடியாது.

**நூல்: முஸ்லிம்**

உங்களுடைய வீடுகளை மண்ணறைகளாக ஆக்கி விடவேண்டாம். நிச்சயமாக ஷைத்தான் பகரா சூரா ஓதுகின்ற வீடுகளில் இருந்து விரண்டோடுகின்றான் என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள் **நூல்: முஸ்லிம்**

இரவில் இந்த சூரா ஓதப்பட்டால் அல்லது ஒரு வீட்டில் இது ஓதப்பட்டு கொண்டிருந்தால் அங்கே ஷைத்தான் அணுகுவதில்லை.

நல்லெண்ணம் வைத்து தூய மனதுடன் இதனை ஓதுவோருக்கு வியாதிகளும் நோய்களும் நீங்கும் என்பதை தன் அனுபவத்தால் கண்டதாக ஹக்கானி (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்.

## 3. சூரா ஆல இம்ரானின் சிறப்புகள்

நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கூறுகிறார்கள்.

பகரா என்ற சூராவையும் அதனை அடுத்துள்ள ஆலஇம்ரான் சூராவையும் நம்மில் எவர் நன்கு உணருகின்றாரோ அவருக்கு மகத்தான கண்ணியமும் வெற்றியும் கிடைக்கின்றன. **நூல்: முஸ்லிம்**

திருக்குர்ஆனை ஓதுங்கள். ஏனெனில் மறுமை நாளில் அது தன்னை ஓதுவோர்களுக்காக இறைவனிடம் சிபாரிசு செய்யும் மிக்க ஒளிவுள்ள பகரா ஆலஇம்ரான் ஆகிய இரு அத்தியாயங்களையும் ஓதிக்கொண்டிருங்கள். அவ்விரண்டும் அவற்றை ஓதக்கூடியவர்களுக்காக இறுதிநாளில் பரிந்துரை செய்யும். **நூல்: முஸ்லிம்**

## 4. சூரத்துந்நிஸாவின் சிறப்புகள்

பெண்களைப் பற்றி உண்டான சட்டங்கள் நிறைய வருவதினால் இந்த அத்தியாயத்திற்கு பெண்கள் என்று பெயர் வந்தது. இதைப்போலவே சூரத்துத் தலாக் என்கிற அத்தியாயத்திலும் பெண்களைக் குறித்த சட்டங்கள்

வந்துள்ளது. ஆயிஷா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள். சூரத்துல் பகரா, சூரத்துந்நிஸா இவ்விரண்டு சூராவும் நான் பெருமானாரிடத்தில் இருந்தபோது இறங்கிய சூராவாகும்.

**நூல்: புகாரி**

யார் ஒருவர் சூரத்துந்நிஸாவை ஓதுவாரோ அவர் சொத்தின் சட்டத்தில் கடமையானதையும் கடமையில்லாததையும் விளங்கிக் கொள்வார் என்று இப்னு அப்பாஸ் (ரலி) கூறுகிறார்கள். **நூல்: முஸ்அப் இப்னு அபீஷைபா**

## 5. சூரத்துல் மாயிதாவின் சிறப்புகள்

ஈஸா நபியிடத்தில் அவர்களது சமூகத்து மக்கள் வானத்திலிருந்து உணவுத்தட்டை கொண்டு வரச்சொன்னார்கள். ஈஸா நபிக்கு அற்புதமாக இந்த நிகழ்வு ஏற்பட்டது. அதைப்பற்றி இந்த சூராவில் கூறப்பட்டுள்ளதால் இதற்கு சூரத்துல் மாஇதா உணவுத்தட்டு என்று பெயர்பெற்றது.

ஜுபைர் இப்னு நுஃபர் (ரஹ்) கூறுகிறார்கள். நான் ஹஜ் செய்துவிட்டு ஆயிஷா நாயகியிடம் சென்றேன். அப்போது ஜுபைரே! மாயிதா அத்தியாயத்தை ஓதியுள்ளீரா? என்று கேட்டார்கள். ஆம் ஓதியுள்ளேன் என்றேன்.

அப்போது ஆயிஷா (ரலி) அவர்கள் கூறினார்கள். இதோ (பாரும்) இந்த சூரா தான் கடைசியாக அருளப்பெற்ற அத்தியாயமாகும். எனவே அதில் ஹலாலாக்கிய ஒன்றை ஹலாலாக்குங்கள். ஹராம் (தடை) ஆக்கப்பட்டதை ஹராமாக்குங்கள். **நூல்: ஹாகிம்**

## 6. சூரா அன்ஆமின் சிறப்புகள்

இந்த சூரா அருளப்பெற்ற போது எழுபதாயிரம் மலக்குகள் வானம் பூமி ஆகிய இரண்டிலும் நிரம்பியவர்களாகவும், தஸ்பீஹ், தஹ்மீது, தம்ஜீது ஆகியவற்றை சப்தமிட்டு ஓதுபவர்களாகவும் வந்தார்கள். இவர்களது சப்தத்தால் பூமியும் கூட தளும்பியது.

அப்பொழுது நபி (ஸல்) அவர்கள் சுப்ஹான ரப்பியல் அளீம் என்று கூறி இறைவனுக்கு சஜ்தா செய்தார்கள்.

எவர் ஒருவர் சூரத்துல் அன்ஆமை ஓதுகிறாரோ அவருக்காக எழுபதாயிரம் மலக்குகள் அந்த இரவிலும் பகலிலும் ஸலவாத்து சொல்கிறார்கள் என்று நபி (ஸல்) அவர்கள் கூறி பின்னர் வஹி எழுதுபவர்களை அழைத்து அது அருளப்பட்ட அதே இரவில் அதனை எழுதும்படி கட்டளையிட்டார்கள்.

எவர் ஒருவர் சூரத்துல் அன்ஆமின் முதல் மூன்று வசனங்களை ஓதுகிறாரோ அவர் ஓதிய அன்றைய காலையில் அவரை சகல தீங்குகளை விட்டும் காக்க 70 எழுபதாயிரம் மலக்குகளை அல்லாஹ் அவர் மீது நியமிக்கிறான். கியாமத்து நாள் வரை அந்த மலக்குகள் செய்யும் அமல்களைப் போல் அவருக்கு நன்மையை எழுதுகிறான்.

மேலும் அவரது இருதயத்தில் ஷைத்தான் ஒரு தீங்கைப் போட நாடினால் அதனை போடும்போதெல்லாம் ஏழாவது வானத்தில் உள்ள ஒரு மலக்கு இரும்பு வளையம் கொண்டு வந்து ஷைத்தானை அடித்து அந்த ஷைத்தானுக்கும் அவருக்கும் இடையில் 70 ஆயிரம் திரைகளை

ஏற்படுத்துகிறார். பின்னர் கியாமத்து நாளில் அவரை நோக்கி அல்லாஹ் கூறுவான்.

ஆதமுடைய மகனே! நீ எனது நிழலின் கீழ் நடந்து) எனது சுவர்க்கத்து கனிகளை புசித்து ஹவுளுள் கவ்தரின் தண்ணீரை அருந்தி ஸல்ஸபீல் என்னும் சுனையில் குளிக்கவும் செய்து கொள்ளலாம். நீ என்னுடைய அடிமை நான் உனது நாயன் உனக்கு கேள்வி கணக்கும் இல்லை வேதனையும் இல்லை என்று சொல்லுவான் என்று இமாமுல் வாஹிதீ (ரஹ்) அவர்கள் தமது வஸீத் என்ற கிதாபில் கூறியுள்ளார்கள்.

## 7. சூரத்துல் அன்ஃபால், சூரத்துத் தௌபாவின் சிறப்புகள்

பகரா முதல் சூரத்துத் தௌபா வரை உள்ள ஏழு நீளமான சூராக்கள் தௌராத் என்னும் வேதத்திற்கு நிகராக எனக்கு கொடுக்கப்பட்டுள்ள சூராவாகும். **நூல்: பைஹகீ**

யார் பகரா முதல் தௌபா வரை உண்டான ஏழு சூராக்களின் விளக்கங்களை எடுத்து கொள்வார்களோ அவர்கள் மிக திறமை வாய்ந்த அறிவு ஞானம் பெற்றவராக இருப்பார் என்று ஆயிஷா (ரலி) அறிவிக்கிறார்கள்.

**நூல்: பைஹகீ**

சூரத்துத் தௌபாவை ஓதுகிற போது பிஸ்மில்லாஹ் சொல்லி துவங்கப்படாது. இந்த சூராவின் கடைசி வசனத்தில் வருகிற ஹஸ்பியல்லாஹு லாஇலாஹ இல்லா ஹுவ அலைஹி தவக்கல்த்து வஹுவ ரப்புல் அர்ஷில் அளீம் என்பதை மனஉறுதியுடன் ஏழு முறை கூறினாலும் சரி

மேம்போக்காக சொல்லியிருந்தாலும் சரி அவரது கவலையை போக்குவதற்கு அல்லாஹ் பொறுப்பேற்றுக் கொள்கிறான்.

**நூல்: அபூதாவூத்**

## 8. சூரத்துல் ஹூதின் சிறப்புகள்

யார் ஒருவர் சூரத்துல் ஹூதை ஓதுவாரோ அவர்களுக்கு நூஹ் நபி ஹூத் நபி ஷுஐப் நபி ஸாலிஹ் நபி லூத் நபி இப்ராஹீம் நபியைக் கொண்டு உண்மைப்படுத்தியவர்களின் எண்ணிக்கையளவும் அவர்களைக் கொண்டு பொய்ப்படுத்திய எண்ணிக்கையில் பத்து மடங்கு நன்மைகளை எழுதுகிறான்.

இன்னும் கியாமத்து நாளில் நல்லோர்களுடன் இருப்பார்கள் என்று நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கூறியதாக உபை இப்னு கஃப் (ரலி) அறிவிக்கிறார்கள்.

**நூல்: தஃப்ஸீர் ஷலாலைன்**

## 9. சூரா யூசுஃபின் சிறப்புகள்

அதாஉ (ரஹ்) கூறுகிறார்கள்

கவலையான ஒருவன் சூரா யூசுஃபை கேட்டால் அதனால் மனஅமைதி பெறுவான். **நூல் - தஃப்ஸீர் ஸாவி**

உங்களுடைய அடிமைகளுக்கு சூரா யூசுஃபை கற்றுக் கொடுங்கள் எந்த முஸ்லிம் யூசுஃப் சூராவை ஓதுவாரோ அல்லது கற்றுக் கொடுப்பாரோ அவருக்கு சக்ராத்துல் மௌத்தை அல்லாஹ் இலேசுப்படுத்துவான். இன்னும் எந்த ஒரு முஸ்லிமும் பொறாமைப் படாத சக்தியை பலத்தை கொடுப்பான் என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

**நூல் - இப்னு கஸீர்**

## 10. சூரத்துல் இஸ்ராவின் சிறப்புகள்

ஆயிஷா (ரலி) அறிவிக்கிறார்கள். நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் ஒவ்வொரு இரவிலும் சூரத்து பனீ இஸ்ராயீல் (சூரத்துல் இஸ்ரா) மற்றும் சூரத்துல் ஜுமரை ஓதி வந்தார்கள்.

## 11. சூரத்துல் கஹ்ஃ பின் சிறப்புகள்

யார் இந்த சூராவின் முதல் பத்து ஆயத்துக்களை மனனம் செய்வாரோ அவர்கள் தஜ்ஜாலை விட்டும் பயம் நீங்கியவராக ஆகிவிடுவார் என்று ஒரு அறிவிப்பிலும் யார் ஒருவர் கஹ்ஃப் சூராவின் கடைசி பத்து வசனங்களை ஓதுவாரோ அவர் தஜ்ஜாலுடைய குழப்பத்தை விட்டு அச்சம் தீர்ந்திருப்பார் என்று மற்றொரு அறிவிப்பிலும் வந்துள்ளது.

**நூல் - திர்மிதி**

ஜும்ஆ நாளன்று யார் இந்த சூராவை ஓதுவாரோ அவர்களுக்கு அந்த ஜும்ஆவிலிருந்து அடுத்த ஜும்ஆ வரையிலுள்ள பிழைகள் பொறுக்கப்படும் என்று ஹதீஸில் வந்துள்ளது.

## 12. சூரா தாஹாவின் சிறப்புகள்

உபை இப்னு கஃப் (ரலி) அறிவிக்கிறார்கள். நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். சூரத்துத் தாஹாவை ஓதுபவர்களுக்கு மறுமை நாளில் அல்லாஹ் முஹாஜிர்கள், அன்சாரிகளின் கூலிகளை வழங்குவான். இந்த சூராவின் மூலம்தான் உமர் (ரலி) இஸ்லாத்தை ஏற்றார்கள்.

## 13. சூரத்துந் நூரின் சிறப்புகள்

உங்களுடைய ஆண்மக்களுக்கு சூரத்துல் மாயிதாவை கற்றுக் கொடுங்கள். உங்களுடைய பெண் பிள்ளைகளுக்கு சூரத்துந் நூரை கற்றுக் கொடுங்கள் என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

**நூல் - பைஹகீ**

பெண்பிள்ளைகளுக்கு சூரத்துந்நூரையும் சூரத்துல் அஹ்ஜாபையும் கற்றுத் தரும்படி உமர் (ரலி) அவர்கள் கடிதம் எழுதினார்கள் என்று ஹாரிதா (ரலி) கூறுகிறார்கள்.

## 14. சூரா ஸஜ்தாவின் சிறப்புகள்

நபி (ஸல்) அவர்கள் அலிஃப் லாம் மீம் ஸஜ்தாவையும் தபாரகல்லதீ சூராவையும் ஓதாமல் தூங்க மாட்டார்கள்

**நூல் - திர்மிதி**

இந்த சூராவை ஓதுபவருக்கு கியாமத் நாளில் இரண்டு இறக்கைகள் வரும். அவருக்கு நிழல் கொடுக்கும் என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

## 15. சூரா அஹ்ஜாபின் சிறப்புகள்

பெண்களுக்கு சூரத்துல் அஹ்ஜாபையும் சூரத்துந்நூரையும் கற்றுக்கொடுங்கள் என்று நபியவர்கள் கூறியுள்ளார்கள்.

**நூல் - பைஹகீ**

நபி (ஸல்) அவர்கள் மிம்பர் படியின் மீது நின்று அதிகமாக ஓதிய ஆயத் இத்தகுல்லாஹ வ கூலூ கவ்லன் சதீதா அல்லாஹ்வை பயந்து கொள்ளுங்கள். நீங்கள் நீதமான வார்த்தையையே சொல்லுங்கள் என்ற இந்த ஆயத்து சூரா அஹ்ஜாபில் கூறப்பட்டுள்ள ஆயத்தாகும்.

## 16. சூரா யாஸீனின் சிறப்புகள்

ஒவ்வொரு பொருளுக்கும் இதயமுண்டு. குர்ஆனின் இதயம் யாஸீன் சூரா என்று கூறினார்கள். யார் ஒருவர் யாஸீன் சூராவை காலை நேரத்தில் ஓதுவார்களோ அவருடைய அன்றைய நாளின் தேவையை அல்லாஹ் நிறைவேற்றித் தருகிறான்.

யார் ஒருவர் இரவு நேரத்தில் இறைப்பொருத்தத்தை நாடி யாஸீன் சூரா ஓதுவார்களோ அவருடைய பாவங்கள் மன்னிக்கப்படும் என்று நபி (ஸல்) அவர்கள் கூறியுள்ளார்கள்.

## 17. சூரத்து ஸாஃப்பாத்தின் சிறப்புகள்

யார் ஒருவர் சூரத்துஸ் ஸாஃப்பாத்தை வெள்ளிக்கிழமை ஓதிவிட்டு அல்லாஹ்விடத்தில் எதனைக் கேட்கிறாரோ அதனை அல்லாஹ் கொடுப்பான் என்று நபி (ஸல்) அவர்கள் கூறியுள்ளார்கள்.

## 18. சூரத்துத் துஹானின் சிறப்புகள்

சூரத்துத் துஹானை இரவில் ஓதுவாரோ அவருக்காக வேண்டி எழுபதாயிரம் மலக்குகள் பாவமன்னிப்புத் தேடுகிறார்கள்.

யார் ஒருவர் ஜும்ஆ நாளின் இரவில் அல்லது அன்றைய பகலில் இதனை ஓதுபவருக்கு சுவனத்தில் ஒரு வீட்டை அல்லாஹ் கட்டச் செய்கிறான்.

## 19. சூரத்துல் கமரின் சிறப்புகள்

அலிஃப் லாம் மீம் ஸஜ்தா சூரா, யாஸீன் சூரா, கமர் சூரா, முல்க் சூரா ஆகிய 4 சூராக்களும் உனக்கு ஒளியாக

ஆகிவிடுகிறது. இன்னும் ஷைத்தானை விட்டும் பாதுகாப்பாகவும் ஷிர்க்கை விட்டும் பாதுகாக்கக் கூடியதாகவும் ஆகிவிடுகிறது. கியாமத்து நாளில் அந்தஸ்துகள் உயர்த்தப்படுவதற்கும் இந்த சூரா காரணமாக அமைகிறது.

யார் ஒருவர் இந்த சூராவை தினந்தோறும் இரவில் ஓதுவார்களோ கியாமத் நாளில் அவர்களின் முகம் பௌர்ணமி இரவின் சந்திரனைப் போல பிரகாசிக்கும்.

## 20. சூரா அர்ரஹ்மானின் சிறப்புகள்

ஒவ்வொரு பொருளுக்கும் அலங்காரம் உள்ளது. குர்ஆனின் அலங்காரம் சூரா ரஹ்மானாக இருக்கிறது.

## 21. சூரா வாகிஆவின் சிறப்புகள்

யார் ஒருவர் இரவில் சூரா வாகிஆவை ஓதுவாரோ அவருக்கு எக்காலமும் வறுமை ஏற்படாது. **நூல் - பைஹகீ**

## 22. சூரத்துல் ஹஷ்ரின் சிறப்புகள்

இந்த சூராவின் முடிவில் வருகிற மூன்று ஆயத்துகளை ஒருவர் ஓதினால் மாலை வரை எழுபதாயிரம் மலக்குகள் இவருக்காக பிழை பொறுக்கத் தேடுகிறார்கள். மாலை நேரத்தில் ஓதினால் காலை வரை இதைப் போன்றே நடைபெறுகிறது. **நூல் - திர்மிதி**

## 23. சூரத்துல் முல்கின் சிறப்புகள்

திருக்குர்ஆனில் முப்பது வசனங்களுடைய ஒரு அத்தியாயம் உள்ளது. அது ஒரு மனிதனுக்காக சிபாரிசு செய்யும். அதனால் அவன் மன்னிப்பு அளிக்கப்படுவான். அதுதான் தபாரகல்லதீ சூராவாகும் என நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். **நூல் - திர்மிதி**

சூரா முல்கை ஓதுபவர்களுக்கு கப்ருடைய வேதனை நீக்கப்படுகிறது. **நூல் - திர்மிதி**

## 24. சூரத்துல் கலமின் சிறப்புகள்

இந்த சூராவின் கடைசி இரண்டு ஆயத்துகளை ஓதி ஊதினால் கண் திருஷ்டி நீங்குகிறது என்று இமாம் பிஸ்தீ (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்.

## 25. சூரத்துல் ஜின்னின் சிறப்புகள்

ஜின், ஷைத்தான் கோளாறு உள்ளவர்களுக்கு ஓதி தண்ணீரில் ஊதி குடிக்கக் கொடுத்தால் அல்லாஹ்வின் அருளால் குணம் அடைவார்கள்.

## 26. சூரா முஜ்ஜம்மிலின் சிறப்புகள்

இந்த சூராவை தினமும் ஓதி வந்தால் நபிகள் நாயகம் (ஸல்) அவர்களை கனவில் காணலாம். இதனை ஓதி வருவதால் இரணம் (ரிஜ்க்) விசாலமாகும். நோய்கள் குணமடையும் என்று அறிவிக்கப்பட்டள்ளது.

## 27. சூரத்துந் நபஃ வின் சிறப்புகள்

யார் ஒருவர் சூரத்துநபஃ வை ஓதி வருவார்களோ அவர்களுக்கு அல்லாஹு தஆலா நாளை மறுமை நாளில் குளிர்ந்த இனிமையான நீரை புகட்டுவான் என்று நபி (ஸல்) அவர்கள் கூறியுள்ளார்கள்.

## 28. சூரத்துல் ஜில்ஜாலின் சிறப்புகள்

சூரத்துல் ஜில்ஜால் என்கிற சூராவை ஒருமுறை ஓதுவது குர்ஆனின் அரைப் பகுதியை ஓதியதற்கு சமமாகும்.

**நூல் - திர்மிதி**

## 29. சூரா தகாஸுரின் சிறப்புகள்

யார் தகாஸுர் சூராவை ஒரு தடவை ஓதுவார்களோ அவர்களுக்கு ஆயிரம் வசனங்கள் ஓதிய நன்மை கிடைக்கப் பெறுகிறது. **நூல் - பைஹகீ**

## 30. சூரத்துல் காபிரூனின் சிறப்புகள்

சூரத்துல் காபிரூன் சூராவை ஓதி வந்தால் ஷிர்க் இணைவைப்பிலிருந்து பாதுகாப்பு பெறுவான்.

## 31. சூரத்துல் இக்லாஸின் சிறப்புகள்

யார் மூன்று தடவை சூரா இக்லாஸ் (குல்ஹுவல்லாஹு) சூராவை ஓதுவார்களோ அவர்கள் முழு குர்ஆனையும் ஓதியதற்கு சமமாகும் என நபி (ஸல்) அவர்கள் கூறியுள்ளார்கள். **நூல் - புகாரி**

ஒருமுறை சூரத்துல் இக்லாஸ் ஓதுவதை கேட்டுவிட்டு அவருக்கு கடமையாகிவிட்டது என்று நபியவர்கள் கூறினார்கள்.

அபூஹுரைரா (ரலி) எது கடமையாகிவிட்டது நாயகமே என்று கேட்டார்கள். சுவர்க்கம் கடமையாகி விட்டது என்று கூறினார்கள். **நூல் - திர்மிதி**

## 32. சூரத்துல் ஃபலக், சூரத்துந்நாஸின் சிறப்புகள்

இரவில் தூங்குவதற்கு விரிப்பிற்கு வந்து விட்டால் குல்ஹுவல்லாஹு, குல்அஊது பிரப்பில் ஃபலக், குல்அஊது பிரப்பின்னாஸ் இந்த சூராக்களை ஓதி கைகளில் ஊதி நெஞ்சில் தடவிக் கொள்வார்கள் என்று ஆயிஷா (ரலி) அவர்கள் கூறுகிறார்கள்.

பாதுகாப்புப் பெறும் விஷயங்களில் மிகச் சிறந்ததை உங்களுக்கு அறிவிக்கட்டுமா? என்று நபியவர்கள் கேட்டுவிட்டு சூரத்துல் ஃபலக், சூரத்துந்நாஸ் ஆகிய இரு சூராக்களை கூறினார்கள். எனவே இவ்விரண்டு சூராவிற்கும் சேர்த்து முஅவ்விததைன் - பாதுகாப்பு அளிக்கக்கூடிய இரு சூராக்கள் என்று சொல்லப்படும் **நூல்: அபூதாவூத்**

யார் ஒருவர் ஜும்ஆ தொழுதுவிட்டு அந்த இடத்திலேயே அமர்ந்து அல்ஹம்து சூராவுக்குப்பின் குல்ஹுவல்லாஹு, குல்அஊது பிரப்பில் ஃபலக், குல்அஊது பிரப்பிந்நாஸ் இந்த சூராக்களை ஏழு விடுத்தம் ஓதுவார்களோ அடுத்த ஜும்ஆ வரை பாதுகாப்பை பெற்றுக் கொள்வார்கள்.



## ஆசிரியரின் நூல்கள்...

1. இனிக்கும் இஸ்லாமியப் புத்தாண்டு

2. அறிவின் பார்வையில் அற்புத இஸ்லாம்

3. பேரன்பு கொள்வோம் பெருமானார் மீது

4. இஸ்லாம் காட்டும் இல்லற வாழ்க்கை

5. தலாக்கின் பாதிப்புகளும் தவிர்ந்து கொள்ளும் வழிமுறைகளும்

6. சுன்னத்தான முறையில் தொழுவது எப்படி?

7. குறைந்த அமல் நிறைந்த பலன்

8. பெண்களுக்குரிய சட்டங்கள் (ஹைளு, நிஃபாஸ், இஸ்திஹாளா)

9. சொர்க்கப்பாதை (ஸலவாத்துகளும் அவற்றின் பலன்களும்)

10. மனதில் நிறைந்த மாநபி (கவிதை நூல்)

11. வஸிய்யத்தின் சட்டங்கள்

12. இல்லம்தோறும் இறைவழிபாடு

<u>இன்ஷா அல்லாஹ் அடுத்த வெளியீடு</u>

## மாநபியின் மணவாழ்க்கை

# துஆச் செய்யுங்கள்

திண்டுக்கல் மாவட்டம் பழனி வட்டத்தைச் சேர்ந்த ஓர் அழகிய ஊர் "**மேல்கரைப்பட்டி**". இஸ்லாமிய பாரம்பரியம் நிறைந்த அவ்வூரின் சிறப்புக்களில் ஒன்று அவ்வூரின் அழகு கலை நயம் நிறைந்த பிரம்மிப்பூட்டும் மினாராக்களுடன் காட்சி தரும் பள்ளிவாசல் ஆகும். அச்சிறப்பு மிகு பள்ளிவாசலை முன்னோர்களுள் பலர் சிறந்த முறையிலே நிர்வாகம் செய்து வந்தார்கள். (அல்ஹம்துலில்லாஹ்)

அந்த வரிசையில் சமீபத்தில் 11-8-2018 சனிக்கிழமை அன்று நம்மை விட்டு பிரிந்த **மர்ஹூம் எம். நிசார் அஹமது** அவர்கள் சிறந்த முறையில் 15 ஆண்டு காலமாக தொடர்ந்து தலைவராக – முத்தவல்லியாக இருந்து திறன்பட பல காரியங்களை செய்து வந்தார்கள்.

"சொந்த ஊரை நேசிப்பது ஈமானின் ஓர் அங்கம்" என்ற ஆன்றோர்களின் சொற்களுக்கு இணங்க சொந்த ஊரையும் ஊரின் நலனையும் குறிப்பாக மேல்கரைப்பட்டி பள்ளிவாசலையும் மிக மிக நேசித்து வந்தார்.

பள்ளிவாசலின் வளர்ச்சிக்காக பல்வேறு விதமான செயல்பாடுகளை மன தைரியத்துடன் துணிந்து செயல்படுத்தி வந்தார். இவ்வாறு ஊரின் நலனின் மீது அக்கறை கொண்ட ஒருவரை இழந்த ஊர் மக்கள் அனைவரும் தமது வருத்தங்களை கண்ணீரோடு வஃபாத்தின் தினத்தில் வெளிப்படுத்தினார்கள்.

மண்ணில் ஒருவரை பற்றி நற்சான்று கூறினால் விண்ணில் உள்ளவர்களும் நற்சான்று பகர்வதோடு அவர்களுக்கு சுவனம் கடமையாகி விட்டது என்ற நபிமொழிக்கு ஒப்ப, அன்னார் அவர்களை இச்சமூகம் அங்கீகரித்ததைப் போன்று இறைவனின் சமூகத்திலும் அன்னார் அவர்களை அங்கீகரித்து அல்லாஹ் அருள்புரிவானாக!

வாழ்கின்ற காலத்தில் அவர்கள் செய்த நன்மைகளை ஏற்று அவர்கள் செய்த பாவங்களை தனது கருணையால் மன்னித்து அருள்புரிவானாக!

இந்நூலைப் படிக்கும் அன்பர்களும் அன்னாருக்காக துஆச் செய்யுமாறு கேட்டுக்கொள்கிறோம்.

*இங்ஙனம்*

குடும்பத்தார்கள், நண்பர்கள், ஜமாத்தார்கள்,
மேல்கரைப்பட்டி.